# கொலம்பியா
## புதிய வெளியீடு



# S.V. பார்த்தசாரதி
பாடிய

GE.6305 { முந்து வெனுக (தர்பார்)
(2 பாகங்கள்)

# பழனி விஜயலக்ஷ்மி
பாடிய

GE.6296
**உன்னரும் தயவில்லையா** (சுநாத விநோதினி)
**கைவிடேனென்று** (கமாஸ்)



**முன் வெளியீடு :—**

CA.1453 { ஆதிபரம்பொருளே
கள் மயிலாட ......

GE.6020 { கன்னிப்பருவத்திலே
தாமோதரன் மருகா

GE.6129
பரமகிருபாகரனே
யாரறிவார் .........



ரஸ்வதி ஸ்டோர்ஸ்
மதராஸ். 2

GHRAC

மேற்கண்ட ரிகார்டுகள் எங்களிடமும் கிடைக்கும்:

மெஸர்ஸ். என். ராஜன் & கோ., 48-D, காவல்ரி ரோடு. பெங்களூர் கண்டோன்மெண்ட். மெஸர்ஸ். குப்தா கார்ப்பொரேஷன், தபால் பெட்டி நெ. 35, 178/428 அருணாசல ஆச்சாரி தெரு, சேலம்.

— 9-6

# அழகின்

# இரு தலைமுறை

இருபது வருஷ வித்தியாசம்! இருந்தும், தாய் தன் பதினறு வயது மகளைப்போல் யௌவனத்தோடும், சரும அழகுடனும் விளங்குகிருள். காரணம் இந்த தாய் தன் தாயின் சொற்படி பியர்ஸ் சோப்பையும், சுத்த ஜலத்தையும் உபயோகித்து சரும அழகைக் காப்பாற்றிக் கொண்டதுதான். இந்த முறையைப் பின்பற்றி அழகான அவள் மகளும் தன் சருமத்தைக் காப்பாற்றுவதால், இருபது வருஷத்திற்குப் பின் தன் தாயின் சருமம் இன்று இருப்பதுபோல், அவள் சருமமும் அழகுடன் விளங்கும்.

நாற்பது ஆண்டுகளாக, இந்திய அழகிகளின் பிரிய சோப் பியர்ஸ்தான். அதன் மணமும், பட்டுபோன்ற மிருதுவான நுரையும் வேறு சோப்புகளைவிட உயர்ந்த ஸ்தானத்தில் அதை வைக்கின்றன.




# பியர்ஸ் சோப்

அழகின்

TQ. 36-172.TM. A. & F. PEARS, ISLEWORTH, ENGLAND




...ர் 5 | 1946 ஜூன் 9 | விய...
...தழ் 44 | | வைகாசி 27





தென்னை மரத்தைக் கற்பக விருக்ஷம் என்று நம்மவர்கள் சொல்வார்கள். தென்னை ...த்தின் ஒவ்வொரு பகுதியும் மனிதனுக்கு ஏதேனும் ஒரு வகையில் உபயோகமாகிறது. ...தைப் போன்ற உபயோகமான மரம் வேறு ஒன்றுமே இல்லை.




கடவுளுடைய சிருஷ்டியின் அற்புதத்தைப் பார்க்க ...ண்டுமானால், தென்னை மரத்தையும் அதில் தேங்காய் ...ய்த்திருப்பதையும் பார்த்தால் போதும்.

சவுக்கு மரமும் கருவேல மரமும் முளைக்கும் அதே பூமியில் ...தென்னை மரம் முளைத்து வளர்கிறது. அதே பூமியிலிருந்து ...சத்தை உறிஞ்சி உச்சிக்குக் கொண்டு போய் அமுதம் போன்ற ...ணவுப் பொருளாக மாற்றித் தருகிறது. தேங்காய் என்னும் ...ற்புத சௌந்தரியப் பொருளைப் பாருங்கள். மேலே ... பசேல் என்று வார்னிஷ் பூசிய பச்சை மட்டை; அத...ன்னே நார்; அதற்குள்ளே கெட்டி ஓடு; ஓட்டுக்குள்ளே ...ளிய தின்பண்டம்; அதனுள்ளே இனிப்பான பானம். ...ரண்டும் உடம்புக்குப் பலமும் சுகமும் தரக்கூடிய 'விடமின்' ...த்துக்கள் உள்ள அபூர்வ உணவுகள்.

இத்தகைய அமுதம் போன்ற உணவுப் பொருளை விஷ...க மாற்றி உடம்பையும் அறிவையும் கெடுத்துக் கொள்ளும் ...டமையை என்னவென்று சொல்வது? அத்தகைய மடமையி...ருந்து சர்க்கார் வருமானம் சம்பாதிக்கும் கொடுமையைத் ...ன் என்னவென்று சொல்வது?

கற்பக விருக்ஷத்தை விஷ விருக்ஷமாக்கும் மடமையும் கொடுமையும் நாட்டிலிருந்து ...ழிய வேண்டும். கள்ளுக் கடைகள் எல்லாம் உடனே மூடப்பட வேண்டும். இந்த ...ஷயம் பற்றிய விவரமான தலையங்கத்தைத் தாங்கி இந்த இதழ் "கல்கி" வெளிவருகிறது.




# மயிலையில் ஜவுளிகளுக்கு

## பிரபலமான இடம்

கலியாண காலத்திற்காக உயர்ந்த ரக கொள்ளேகாலம், பெங்கால், பெனாரஸ் பட்டு சேலைகளும், தாவணிகளும், ரவிக்கை துண்டுகளும் நவநாகரிக டார்பாலுவும், நூதன டிசைன்களில் இதர ஜவுளிகளும் ஸ்பெஷலாக தருவித்துள்ளோம்.

தங்கள் நல்வரவை அன்புடன் எதிர்பார்க்கிறோம்.

# ஸ்ரீ லக்ஷ்மி ஹால்

(ஜவுளி வியாபாரம்)

7 வடக்கு மாட வீதி

மயிலாப்பூர் :: மதராஸ்

BALU'S



# கல்கி

மலர் 5 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 44

# என்ன சேதி?

## அரிசியோ அரிசி!

உணவுப் பிரச்னையைப் பற்றி மேல் ட்ட சபையில் பேசியவர்களில் டாக்டர் ாஜன் முதன்மையாக இருந்தாரென் தைப் பார்த்தோமல்லவா? கீழ்ச் சட்ட பையிலோ, ஸ்ரீ அண்ணாமலைப் பிள்ளை ணவுப் பிரச்னையைத் தவிடுபொடி ாக்கி விட்டார்! பேசுவதற்கு எழுந்து ின்றதும், கையோடு அவர் கொண்டு ந்து பத்திரமாய் வைத்திருந்த மூட் டையை அவிழ்த்தார். அதிலிருந்த புழுத்த அரிசியையும் உளுத்த சோளத்தையும் டுத்து "இதோ பாருங்கள், ரேஷன் ானியத்தின் இலட்சணத்தை!" என்று ல்லாரும் பார்க்கும்படி காட்டினார். கொஞ்சம் அரிசியை ஒரு கையில் எடுத்து ின்னொரு கையால் அரைக்கவும், அரிசி டனே மாவாகப்போன அதிசயத்தை ம். எல். ஏ.க்கள், மந்திரிமார்கள் எல்லா ும் பார்த்தார்கள்.

"இந்தப் புழுத்த அரிசியையும் உளுத்த சாளத்தையும் ஜனங்களின் தலையிலே ட்டுகிறீர்களே? இது முறையா? இது குமா?" என்று கதறினார்.

வர வரக் கூட்டம் குறைந்து, பாக்கி ுன்னவர்களும் தூங்கி விழுந்து கொண் ருந்த சட்டசபையானது ஸ்ரீ அண்ணா லைப் பிள்ளை பேசியபோது நிமிர்ந்து ட்கார்ந்து கவனிக்கும்படி ஆயிற்று.

## வருகிறது கப்பல்

"அமெரிக்காவிலிருந்து 11 லட் த்து 65 ஆயிரம் டன் தானியம் இந்தியா ுக்கு வரப்போகிறது!" என்று பிரிட் டிஷ் பார்லிமெண்டில் மிஸ்டர் மாரிஸன் றிவித்த செய்தி நமக்கெல்லாம் குதூ லத்தை உண்டாக்கியது. "பஞ்சம் இனி மல் என்ன செய்யும்?" என்ற தைரி த்தையும் உண்டு பண்ணியது. ஆனாலும், அந்தக் குதூகலத்துக்கும் தைரியத்துக்கு மிடையே, "எந்த மாதிரி தானியம் வரப்போகிறதோ?" என்றும் கவலையும் ஓரளவு இல்லாமற் போகவில்லை. ஸ்ரீ அண்ணாமலைப் பிள்ளை மூட்டை கட்டிக் கொண்டு வந்த தானியம் மாதிரியே வந்துவிட்டால் என்னத்தைச் செய்கிறது? அமெரிக்காவிலே மனிதர்களுக்குக் கண்டு மிச்சமாகும் தானியத்தை யெல்லாம் மாடுகளுக்கும் பன்றிகளுக்கும் தீனியாக வைப்பார்கள் என்று பத்திரிகைகளிலே அடிக்கடி படித்து வந்தோம். மகாராஜர்கள் நமக்கு என்ன மாதிரி தானியத்தை அனுப்புகிறார்களோ, என்னமோ? கப்பல் வந்து சேர்ந்து தானியத்தைக் கண்ணால் பார்க்கும் வரையில் கொஞ்சம் கவலை இருந்து கொண்டுதானிருக்கும்.

## தலைகீழ்ப் பாடம்

ஒரு காலத்தில் இந்தியாவின் தேசிய இயக்கத்தில் "அன்னிய சாமான் பகிஷ்காரம்" மிக முக்கியமான அம்சமாயிருந்தது. இப்போது நிலைமை தலைகீழ்ப் பாடமாக மாறிவருகிறது. அன்னிய தேசத்திலிருந்து உணவுப் பொருள் வருவதற்காகத் தூதுக்குமேல் தூது அனுப்புகிறோம். சிபார்சுக்கு மேல் சிபார்சு அனுப்புகிறோம். அமெரிக்கா அனுப்பும் தானியம் சும்மா அனுப்பப் போவதில்லை. அந்தக் கடனை எந்த வழியில் தீர்க்கப் போகிறோமோ தெரியவில்லை. இந்த மாதிரியே சில வருஷத்துக்குத் தானிய இறக்குமதி செய்து கொண்டிருந்தால், தானியத்தின் விலையும் பிரிட்டிஷ் கப்பல்களுக்குக் கூலியும் சேர்ந்து பிரிட்டன் நமக்குக் கொடுக்க வேண்டிய ஸ்டர்லிங் கடன் பூராவும் தீர்ந்து போனாலும் போகலாம் அல்லவா?

உணவுப் பொருளுக்கு மட்டும் அல்ல; பத்திரிகை அச்சிடுவதற்கு வேண்டிய

காகிதத்துக்காக இரண்டு பிரபல பத்திரிகாசிரியர்கள் அன்னிய நாடுகளுக்குத் தூது சென்றிருக்கிறார்கள்!

துணிப் பஞ்சத்தைப் பற்றிச் சென்னைச் சட்டசபையில் நடந்திருக்கும் விவாதத்தைக் கவனித்தால், "துணி அனுப்புங்கள்!" என்று மன்றாடுவதற்காக லங்காஷயருக்குத் தூது அனுப்ப நேர்ந்தாலும் நேரலாம்போலிருக்கிறது!

## முதற் கடமை

ஜெர்மனியையும் ஜப்பானையும் போல் இந்தியா யுத்தத்தில் தோற்கவில்லை; அன்னிய சைன்யத்தின் படையெடுப்புக்கு ஆளாகவில்லை. ஆயினும் இந்தியா ஏன் இந்த கதியை அடைந்திருக்கிறது? ஆறு வருஷ காலம் மாகாணங்களை அட்வைஸரி கவர்ன்மெண்டுகளின் கீழ் விட்டிருந்ததின் பலன்தான்!

அந்த நிலைமை இனிமேலாவது மாற வேண்டும். நமக்கு வேண்டிய உணவையும் உடையையும் நாமே உற்பத்தி செய்து கொள்ளும் நிலைமையை ஏற்படுத்த வேண்டும். இது, புதிய காங்கிரஸ் மந்திரிகளின் முதற் கடமையாகும்.

## மணங்குக்கு ஒரு ரூபாய்

மொத்தத்தில் இரண்டு சபைகளிலும் உணவுப் பிரச்னை சம்பந்தமாக நடந்த வாதம் செவிடன் காதில் ஊதிய சங்காக முடியவில்லை. ஓரளவு பலனளித்திருக்கிறது என்றே சொல்லவேண்டும். விவாத ஆரம்பத்தில் பிரதம மந்திரி பிரகாசம் சமர்ப்பித்த பஞ்ச நிவாரணத் திட்டம் சாரமில்லாத மாமூல் அதிகார வர்க்கத் திட்டமாக இருந்தது. விவாதத்தின் முடிவில், அங்கத்தினர்கள் கூறிய யோசனைகளை அனுசரித்துச் சில புதிய திட்டங்களைக் காரியத்தில் கொண்டு வருவதாக வாக்குக் கொடுத்திருக்கிறார். இந்தப் புதிய பஞ்ச நிவாரணத் திட்டங்களில் ஒன்று, "ஜூன், ஜூலை மாதங்களில் சர்க்காரிடம் நெல் கொடுப்பவர்களுக்கு மணங்குக்கு ஒரு ரூபாய் வீதம் இனாம் தரப்படும்" என்பது. மணங்குக்கு ஒரு ரூபாய் என்றால், 24 பட்டணம் படி அடங்கிய தஞ்சாவூர்க் கலம் ஒன்றுக்கு ஒன்றரை ரூபாய் ஆகிறது. நெல் விலையைச் சிறிதளவு உயர்த்திக் கொடுக்க வேண்டுமென்று விவசாயிகள் எவ்வளவோ மன்றாடிக் கேட்டுக் கொண்டார்கள். அதெல்லாம் முடியாது என்று கண்டிப்பாகக் கவர்னர் துரையும் பிரதம மந்திரியும் சொன்னார்கள்.

இப்போது கலத்துக்கு ஒன்றரை ரூபாய் இனாம் அளிப்பது "வைத்தால் குடுமி சிரைத்தால் மொட்டை" என்ற வசனத்தை யொட்டி இருக்கிறது. கலத்துக்கு ஒன்றரை ரூபாய் அதிக விலை கொடுப்பதினால் பாதகமில்லை. ஆனால் அந்தப் பணம் உண்மையில் விவசாயிக்குப் போய்ச் சேருகிறதா என்பது கேள்வி. அதாவது நெல்லை அளந்து கொடுக்கும் விவசாயிக்கு மட்டுமே மேற்படி இனாம் கொடுப்பது முறையாகும். இடையில் கொள்ளை லாபம் அடிப்பதற்காக நெல் சேர்த்து வைத்திருக்கும் கள்ள மார்க்கெட் வியாபாரிக்கு மேற்படி இனாம் கொடுக்கக் கூடாது. அப்படிக் கொடுப்பது விவசாயிக்கு அநீதி இழைத்துக் கொள்ளைக்காரர்களுக்கு உதவி செய்வதாகும். கள்ள மார்க்கெட் முதலாளிகள் பதுக்கி வைத்திருக்கும் தானியத்தை ஸ்ரீ பிரகாசம் காரு இன்னொரு சமயம் சொன்னது போல் 'தோண்டி' எடுத்துப் பறிமுதல் செய்வதுதான் நியாயமாகும்.

# உணவுப் பிரச்னை


அதிகப்படி கோதுமையைக்
குதிரைக்கு வைத்தால்


பிறகு நாம் அதன்மீது
சவாரி செய்யலாம்.


பன்றிக்கு வைத்தால் அது
கொழுத்து வளரும்.


பிற்பாடு நாம் பன்றியையே
சாப்பிடலாம்.


பசுவுக்கு வைத்தால்




கோழிகளுக்குப் போட்டால்


நமக்கு முட்டைகள்
கிடைக்கும்.

உம்மன்
















பிரிட்டிஷ் மந்திரி மாரிஸன் தமது பெருமுயற்சியால் இந்தியாவுக்கு அதிக உணவு அனுப்ப அமெரிக்காவை இணங்கச் செய்ததாகக் காமன்ஸில் அறிவித்தார்.

# காலம் வந்துவிட்டது!

பொல்லாத கள்ளரக்கனே! காலம் உனக்கு வந்துவிட்டது! ஈவு இரக்கமற்ற பாதகனே! உன் இறுதி நாள் நெருங்கிவிட்டது! நீ கதி கலங்குகிறாயா? நன்றாய்க் கதி கலங்கு! நீ பயந்து நடுங்குகிறாயா? நன்றாய்ப் பயந்து நடுங்கு! உன் நெஞ்சு பக், பக் என்று வேகமாய் அடித்துக் கொள்ளுகிறதா? அதி வேகமாய் அடித்துக் கொள்ளட்டும்! பாவி அரக்கனே! உன் காலம் முடிந்துவிட்டது! உன் கழுத்துக்குக் கயிறு தயாராகிவிட்டது!

உன்னிடம் யாரும் இரக்கம் காட்டப் போவதில்லை. ஏனெனில் நீ யாரிடமும் இரக்கம் காட்டியதில்லை. ஆஹா! எத்தனை ஏழைக் குடித்தனங்களை நீ கெடுத்திருக்கிறாய்? எத்தனை மனிதர்களின் அறிவைக் கெடுத்து அவர்களை மிருகப் பிராயமாக்கியிருக்கிறாய்? எத்தனை லட்சம் பெண்மணிகளின் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொண்டிருக்கிறாய்? எத்தனை லட்சம் குழந்தைகளைப் பட்டினி போட்டுக் கொன்றிருக்கிறாய்? ஆஹா! பகாசுரனைக் காட்டிலும் பன்மடங்கு கொடிய அரக்கனாயிற்றே நீ! உன்னிடம் யார் இரக்கம் காட்டுவார்கள்?

கள்ளரக்கனே! உன் ஆயுள் முடிந்துவிட்டது. சென்னையில் காங்கிரஸ் கவர்ன்மெண்ட் ஏற்பட்டுவிட்டது. மது விலக்குச் சட்டம் ஏற்கெனவே தயாராயிருக்கிறது. உன்னால் வந்த வருமானத்துக்குப் பிரதி வருமானம் ஏற்கெனவே ஏற்பாடாகியிருக்கிறது. சென்னை மாகாணத்துக்கு வந்திருக்கும் புதிய கவர்னர் ஆவரை உன் உறவைக் கட்டோடே விட்டொழித்தவராம்! எனவே, அற்ப நம்பிக்கை வைக்கவும் இனிமேல் உனக்கு இடம் கிடையாது. பரலோக யாத்திரைக்குத் தயாராக வேண்டியதுதான். விடை பெற்றுக் கொண்டு நடையைக் கட்ட வேண்டியதுதான்.

ஆகா! தெரிகிறது! உன் மனதிலே இன்னும் கொஞ்சம் சபலம் இருக்கிறது. "நல்லவேளையாக அந்தப் பொல்லாத ஸி. ஆர். பிரதம மந்திரியாக வில்லை! அதனால் இன்னும் கொஞ்ச காலம் தப்பிப் பிழைக்கலாம்!" என்று நினைக்கிறாய். "பிரகாசம்காரு தானே பிரதம மந்திரியாய் வந்திருக்கிறார்! அவருடைய பல ஜோலிகளிலும் கவலைகளிலும் நம்முடைய விஷயத்தை மறந்து போய் விடுவார்!" என்று எண்ணுகிறாய். ஆனால் அதெல்லாம் வீண் ஆசைதான். பிரதம மந்திரி பிரகாசம் உன்னை மறந்துவிட்டாலும் ஞாபகப்படுத்த வேறு பலர் இருக்கிறார்கள். நீ அடியோடு இந்த மாகாணத்தைவிட்டு ஒழியும் வரையில் அவர்கள் ஞாபகப்படுத்திக் கொண்டுதானிருப்பார்கள். கள்ளரக்கனே! நீ மூட்டை கட்ட வேண்டியதுதான்.

* * *

மேற்கண்டவாறு கள்ளரக்கனுக்கு நாம் கண்டிப்பாக நோட்டீசு கொடுப்பதற்குப் போதிய காரணங்கள் இருக்கின்றன.

"கள்ளுக்கடை மூடுவார்களோ, மூட மாட்டார்களோ?", "மதுவிலக்குச் செய்வார்களோ, செய்ய மாட்டார்களோ?" என்ற சந்தேகம் நமக்குச் சிறிதும் கிடையாது.

அந்தமாதிரி சந்தேகத்தைக் கிளப்பக்கூடிய சில ஆஸ்பதங்கள் ஏற்பட்டிருக்கின்றன என்பது உண்மைதான்.

காங்கிரஸ் மந்திரி சபை ஏற்பட்டு ஒரு மாதத்துக்கு மேலாகியும் பிரதம மந்திரி பிரகாசம் மதுவிலக்கைப் பற்றி வாயைத் திறக்கவில்லை.

மற்றும் சில மந்திரிகள் மதுவிலக்கைப் பற்றிப் பேசியிருக்கிறார்கள். ஆனால் சந்தேகத்தைக் கிளப்பும் முறையில் பேசிக் குழப்பியிருக்கிறார்கள்.

ஒரு மந்திரி தாம் பேசிய பொதுக் கூட்டத்தில் "மதுவிலக்கைக் கொஞ்சம் கொஞ்சமாகக் கொண்டுவர வேண்டுமா? ஒரேயடியாகக் கொண்டு வந்துவிட வேண்டுமா? உங்கள் அபிப்பிராயம் என்ன?" என்று கேட்டாராம்.

"ஒரே அடியாக மூடவேண்டும்" என்று அத்தனை பேரும் சொன்னார்கள். "கொஞ்சம் கொஞ்சமாக" மூடுவதற்கு ஒருவர்கூடச் சாதகமாயில்லை.

இன்னொரு மந்திரி "மதுவிலக்கை உடனே செய்ய முடியாமல் ஒத்திப் போட நேர்ந்த போதிலும், விற்பனை வரியை மட்டும் எடுக்க முடியாது! வேறு பல செலவுகள் இருக்கின்றன!" என்று பேசியிருக்கிறார்.

இதெல்லாம் சந்தேக விபரீதங்களை உண்டாக்கக் கூடிய பேச்சுக்கள்தான்.

ஆனபோதிலும் இந்த வழ வழாப் பேச்செல்லாம் யோசனையற்ற அர்த்தமற்ற பேச்சு என்றே நாம் கருதுகிறோம். பிரதம மந்திரியின் மௌனத்துக்கு விபரீத அர்த்தம் கற்பிக்கவும் நாம் தயாராயில்லை. அவர் மதுவிலக்கைப் பற்றி மனதிற்குள் சிந்தித்துப் 'பிளான்' போட்டுக் கொண்டிருக்கிறார் என்றே நம்புகிறோம்.

வருகிற ஆகஸ்டு மாதத்திலிருந்து சென்னை மாகாணம் முழுவதிலும் பூரண மதுவிலக்குச் சட்டம் அமுலுக்குக் கொண்டு வரப்படுமென்று எதிர்பார்க்கிறோம்.

அவ்வாறு செய்யாவிட்டால், அது இந்த மாகாணத்து மக்களுக்கு இழைக்கப்படும் பெருந் துரோகமாகும் என்று வற்புறுத்திக் கூறுகிறோம்.

* * *

பூரண மது விலக்கைத் தள்ளிப் போடுவதற்கோ, "கொஞ்சம் கொஞ்சமாகக் கொண்டு வருகிறோம்" என்று சொல்வதற்கோ தற்சமயம் எந்த விதமான முகாந்திரமும் கிடையாது.

முகாந்திரம் ஏதாவது சொன்னால், அது பொய் முகாந்திரம் என்று நிச்சயமாக வைத்துக் கொள்ளலாம்.

1921-ம் ஆண்டிலிருந்து காங்கிரஸ் வேலைத் திட்டங்களில் மதுவிலக்கு மிக முக்கியமான திட்டமாக இருந்து வந்திருக்கிறது.

கள்ளுக் கடை மறியல் செய்து எத்தனையோ ஆயிரம் காங்கிரஸ் தொண்டர்கள் சிறை புகுந்தார்கள். எத்தனையோ ஆயிரம் பேர் அடி பட்டார்கள். எத்தனையோ சகோதரிகள் கையில் குழந்தையுடனே மறியல் செய்து சிறைக்குப் போனார்கள்.

அந்தத் திட்டத்தினாலேதான் கல்வியறிவில்லாத,—பத்திரிகை படிக்கத் தெரியாத,—பாமர மக்களிடையே காங்கிரஸ் மகா சபையின் செல்வாக்கு வளர்ந்தது. "காங்கிரஸ் வந்தால் கள் ஒழியும்", "மஞ்சள் பெட்டியில் வோட்டுப் போட்டால் கள்ளுக்கடைகளை மூடுவார்கள்" என்று பாமர ஜனங்கள் நம்பினார்கள்.

1938-ல் காங்கிரஸ் மந்திரி சபை ஏற்பட்ட போது பொது மக்களின் நம்பிக்கையை மெய்ப்பிக்கப் பிரயத்தனம் தொடங்கப்பட்டது.

அச்சமயம் அதற்குப் பூர்வாங்கச் சடங்குகள் சில அவசியமாயிருந்தது.

மதுவிலக்கு மசோதா தயாரித்துச் சட்டசபையில் கொண்டுவந்து நிறைவேற்றிச் சட்டம் ஆக்கப்பட்டது.

அப்போது சென்னை மாகாணத்தின் பொருளாதார நிலைமை மிகவும் மோசம். வரவை விடச் செலவு அதிகம்.

எனவே, மதுவிலக்கை முன்னிட்டுப் புது வரிகள் போடவேண்டியிருந்தன.

ராஜாஜி தமது அறிவின் சக்தியையெல்லாம் பிரயோகித்து அதிகமான ஜனங்களிடம் குறைந்த அளவில் சிரமமில்லாமல் வசூலிக்கக் கூடிய விற்பனை வரியைக் கண்டுபிடித்துப் போட்டார்.

புதிய வரியாதலால் வியாபார சமூகம் பலமாக எதிர்த்தது. அதையெல்லாம் பொறுமையுடன் தாங்கிக் கொண்டார். "மதுவிலக்குக் காகவே விற்பனை வரி போடுகிறோம்; நல்ல காரியத்துக்காகக் கொடுக்கத்தான் வேண்டும்" என்று வியாபாரிகளைக் கேட்டுக் கொண்டார்.

அந்த விற்பனை வரி வளர்ந்து இப்போது வருஷம் சுமார் ஆறு கோடி ரூபாய் வருமானம் தருகிறது.

சென்ற 1944-45ல் பலவித வியாபார வரிகளின் மூலம் சென்னை சர்க்காருக்குக் கிடைத்த வருமானக் கணக்கு வருமாறு:—

| | லட்சம் ரூ. |
|---|---|
| உல்லாசக் காட்சி வரி | 28 |
| பந்தய வரி | 11 |
| பெட்ரோல் வரி | 34 |
| பொது விற்பனை வரி | 5,20 |
| மின்சார வரி | 9 |
| புகையிலை வரி | 32 |
| ஆக | ரூ. 6,34 லட்சம் |

மேற்படி 6 கோடி ரூபாய் சொச்சமும் பொது மக்களிடம் மதுவிலக்குக்காக என்றே வசூலிக்கப்பட்டதாகும். இதை வேறு வழிகளில் செலவழிப்பது சிறிதும் நியாயமாகாது. அப்படிச் செலவழிப்பது ஜனங்களை வஞ்சித்து மோசம் செய்வதாகும். அதைத் 'திருட்டு' 'கொள்ளை' என்றெல்லாம் சொன்னாலும் தவறாகாது.

மதுவிலக்கு இயக்கத்திலே, "மது விலக்குச் செய்கிறோம்" என்ற வாக்குறுதியிலோ சிரத்தையும் சம்பந்தமும் இல்லாத அட்வைஸரி கவர்ன்மெண்டார் கூட மேற்படி முறைத் தவறை உணர்ந்திருந்தார்கள். "விற்பனை வரியை வேறு காரியத்துக்கு உபயோகிப்பது அக்கிரமம்" என்பதை அறிந்திருந்தார்கள். ஆகையினால்தான் விற்பனை வரிப் பணத்தை யெல்லாம் தனியாக எடுத்து 'ரிஸர்வ்' நிதியில் போட்டு வந்தார்கள். அப்படிப் போட்டு

வந்த பணம் — ரூ. 30,40,74,000 தற் சமயம் கையிருப்பில் இருக்கிறது.

விற்பனை வரியை மதுவிலக்கைத் தவிர வேறு காரியங்களுக்குச் செல வழிப்பது எம்மாதிரி குற்றமாகுமோ, அம்மாதிரியே மேற்படி கையிருப்புத் தொகையை வேறு காரியங்களுக்குச் செலவழிப்பதும் குற்றமாகும்.

*　　　*　　　*

சென்ற 1944-45ம் வருஷத்தில் கலால் வருமானம் மொத்தம் ரூ. 12 கோடி 77 லட்சம்.

இந்தப் பெருந் தொகையை, ஏழை எளிய மக்கள் தங்களையும் தங்கள் பெண்டு பிள்ளைகளையும் பட்டினி போட்டு, கள்ளரக்கனுக்குக் காணிக்கை யாகச் சமர்ப்பித்தார்கள்.

நெற்றி வியர்வை நிலத்தில் விழ உழைத்துப் பாடு பட்டுச் சம்பாதித்த ஏழைகள் கொடுத்த தொகை அது. உழைப்பாளி நெஞ்சின் இரத்தத்திலே தோய்ந்து, பெண்கள் குழந்தைகளின் கண்ணீரில் நனைந்து வந்திருக்கும் பணம் அது.

அத்தகைய படுபாதக வருமானத் தைக் காங்கிரஸ் சர்க்கார் இனிமேல் வாங்கக் கூடாது. உடனே நிறுத்தி யாக வேண்டும்.

நிறுத்துவதற்கு வழி இருக்கிறது.

வர்த்தக — விற்பனை வரி ரூ. 6 கோடி 34 லட்சத்தோடு பழைய கையிருப்பி லிருந்து வருஷம் ரூ. 6 கோடி எடுத்துக் கொண்டால், கலால் வரிக்கு சரியாகி விடும்.

எனவே, ஐந்து வருஷ காலத்துக்கு எவ்விதக் கஷ்டமும் இல்லாமல் பூரண மதுவிலக்கை இம்மாகாணம் முழுவ திலும் நடத்தலாம்.

*　　　*　　　*

பூரண மதுவிலக்கை உடனடியாகச் சென்னை மாகாணம் முழுவதிலும் கொண்டுவர வேண்டும். அதற்கு எவ் வி்தத் தடையும் இல்லை. தள்ளிப் போடக் காரணம் கிடையாது.

மதுவிலக்குச் சட்டம் ஏற்கெனவே தயாராக இருக்கிறது.

அதை நடத்துவித்து அநுபவம் பெற்ற உத்தியோகஸ்தர்கள் இருக் கிறார்கள்.

கலால் வருமானம் முழுவதையும் சரி செய்வதற்கு வேண்டிய பணம் இருக்கிறது.

"மதுவிலக்குச் சட்டம் அமுலுக்கு வரட்டும்!" என்று காங்கிரஸ் மந்திரி சபை உத்தரவு போடவேண்டியது ஒன்றுதான் பாக்கி.

அத்தகைய உத்தரவை நமது புதிய மந்திரி சபை உடனே போடும் என்று நம்பிக்கையுடன் எதிர்பார்க்க நமக்கு உரிமையுண்டு.

"பஞ்சம் வருகிறது; வரப் போகி றது" என்று மந்திரிகள் உள்பட எல்லாரும் எச்சரித்திருக்கிறார்கள்.

பஞ்சம் ஏன் வருகிறது? உணவுப் பொருள் விளையாமையால் வருகிறது. உணவுப் பொருள் விளையாதபோது குடி ஜனங்களுக்கு வறுமைக் கஷ்டமும் அதிகமாகிறது.

பட்டணங்களில் உள்ளவர்களுக்கு உணவுப் பொருள் பஞ்சம் மட்டும்தான். கிராமவாசிகளுக்கோ உணவுப் பஞ்சத் துடன் பணப் பஞ்சமும் சேர்ந்தே வருகிறது.

இந்த நிலைமையில் கள்ளுக் கடை வைத்து ஏழை எளிய மக்களை மேலும் கொள்ளையடிப்பது மகா பாதகம்.

எனவே, கள்ளு சாராயக் கடைகளை உடனே மூடியாக வேண்டும்.

*　　　*　　　*

மதுவிலக்கு உடனே செய்வதற்குப் புது மந்திரிகளுக்கு மற்றொரு முக்கிய காரணமும் சேர்ந்திருக்கிறது.

ராஜாஜி பிரதம மந்திரியாக வரக் கூடாதென்பதற்காக அவர்கள் வெகு பாடு பட்டார்கள்; பெரு முயற்சி செய் தார்கள்; மகாத்மா - ஆஸாத் - படேல் புத்திமதியையும் புறக்கணித்தார்கள்.

ராஜாஜி மறுபடியும் என்ன 'சூழ்ச்சி' செய்து இந்த மந்திரி சபையைக் கவிழ்த்து விடுவாரோ, திரும்பத் தாம் வந்து விடுவாரோ என்ற பயம் புது மந்திரிகளின் மனதில் இருக்கலாம்.

அந்த பயத்தை அடியோடு போக்கிக் கொள்ள ஒரு வழி ஏற்பட்டிருக்கிறது.

"கள்ளு சாராயக் கடைகளை உடனே மூடி விடுங்கள்; அது மட்டும் செய்து விட்டால், பிரதம மந்திரியாவதற்கோ, வெறும் மந்திரியாவதற்கோ நான் பிர யத்தனமே செய்வதில்லை!" என்று பொதுக் கூட்டத்தில் பகிரங்கமாக ராஜாஜி உறுதி கூறியிருக்கிறார்.

பல காரணங்களோடு இந்தக் கார ணத்தை முன்னிட்டும் நமது புதிய காங்கிரஸ் மந்திரிகள் உடனே பூரண மது விலக்கை அமுலுக்குக் கொண்டு வரட்டும்; ஏற்கெனவே நடுநடுங்கத் தொடங்கியிருக்கும் கள்ளரக்கனை அடி யோடு ஒழித்துத் தலை முழுகட்டும்.

---

*சென்ற இதழில் வெளியான காலக்ஷேபத் துணுக்குக்கும் பரிசு பெற்றவர்: என். வி. துரைசாமி, "வித்யாகுகம்" செப்பு போண்டு, திருச்சூர் வழி.*

# சிவகாமியின் சபதம்

கல்கி

## அத்தியாயம் 46

## ரஞ்சனியின் வஞ்சம்

மூர்ச்சித்து விழுந்த சிவகாமியண்டை நாகநந்தி பாய்ந்து சென்று நெற்றியின் பொட்டுக்களிலும் மூக்கின் அருகிலும் தம் நீண்ட விரல்களை வைத்துப் பார்த்தார்.

காபாலிகையைக் கடுங்கோபத்துடன் நோக்கி, "அடி பாதகி! என்ன காரியம் செய்து விட்டாய்!" என்றார்.

நள்ளிரவில் மயானத்தில் பேய்கள் பல சேர்ந்து சிரிப்பதுபோல் காபாலிகை சிரித்தாள்.

"அடிகளே! நான் என்ன பாதகத்தைச் செய்து விட்டேன்? தாங்கள் சொன்னபடிதானே செய்தேன்? இவளுடைய காதலன் மாமல்லனை வீட்டுக்குள்ளே நுழைந்ததும் கொன்று விடும்படி தாங்கள்தானே சொன்னீர்கள்? அருமைக் காதலனுடைய கதியைக் கண்டு இந்தக் கற்புக்கரசி செத்து விழுந்தால் அதற்கு நான் என்ன செய்வேன்?" என்று காபாலிகை சொல்வதற்குள் நாகநந்தி குறுக்கிட்டு, "அசடே! மாமல்லன் இவன் அல்ல. மாமல்லனுடைய ரத சாரதி கண்ணபிரான் இவன்! அரசனுக்கும் ரத சாரதிக்கும் உள்ள வித்தியாசங்கூட உனக்குத் தெரியவில்லையா?" என்றார்

"ஓஹோ! அப்படியா சமாசாரம்? 'முதலில் மாமல்லன் பிரவேசிப்பான், அவனைக் கொன்று விடு!' என்று தாங்கள் சொன்னபடி செய்தேன். இப்போது இவன் மாமல்லனில்லை, அவனுடைய சாரதி என்கிறீர்கள்!"

இப்படி இவர்கள் பேசிக்கொண்டிருந்த சமயத்தில் வாசற் கதவை வெளியிலிருந்து தடால் தடால் என்று கோடரியால் பிளக்கும் சத்தம் கேட்கத் தொடங்கியது.

"ரஞ்சனி! போனது போகட்டும். கடைசியாக நான் கேட்கும் ஒரே ஒரு உதவியை மட்டும் செய். இந்தப் பெண்ணின் உடம்பில் இன்னும் உயிர் இருக்கிறது. கொஞ்சம் அவகாசம் இருந்தால் இவளை உயிர்ப்பித்து விடுவேன். இவள் நம்முடைய வசத்தில் இருக்கும் வரையில் மாமல்லன் எப்படியும் இவளைத் தேடிக் கொண்டு வருவான். என்னுடைய பழி நிறைவேறும் வரையில் இவள் உயிரோடிருந்தாக வேண்டும். ஆகையால் இவளை எடுத்துக்கொண்டு நான் முன்னால் போகிறேன். அதோ பல்லவ வீரர்கள் கதவைப் பிளக்கிறார்கள். நீ சற்று நேரம் இங்கேயிருந்து அவர்களை எப்படியாவது தடுத்து நிறுத்து......"

"அடிகளே! ஒருவர், இருவர் வந்தால் நான் சமாளிப்பேன். கதவைப் பிளந்து கொண்டு பலர் உள்ளே வந்தால் அவர்களையெல்லாம் நான் எப்படித் தடுத்து நிறுத்த முடியும்?"

"உன் சாமர்த்தியத்தையெல்லாம் இதிலேதான் காட்ட வேண்டும். நீதான் சிவகாமி என்று சொல்லு. சற்று நேரம் அவர்கள் திகைத்து நிற்பார்கள். அப்புறம் ஏதாவது சாக்குப் போக்குச் சொல்லு! அரை நாழிகை நேரம் அவர்களைத் தடுத்து நிறுத்தி வைத்தால் போதும்!......"

"ஆ! கள்ள பிக்ஷுவே! பல்லவ வீரர்கள் கையால் என்னைக் கொல்லுவிப்பதற்குப் பார்க்கிறீர்!"

"ரஞ்சனி! பல்லவ வீரர்களால் நீ சாகமாட்டாய் என்று சத்தியம் செய்து கொடுக்கிறேன். உன்னைப் பைத்தியக்காரி என்று அவர்கள் விட்டு விடுவார்கள். ஒரு நாளும் அவர்களால் உனக்கு மரணம் நேராது. போ! சீக்கிரம் போ! இந்த ஒரு உதவி எனக்கு நீ செய்! அப்புறம் உன்னை எக்காலத்திலும் மறக்க மாட்டேன்!"

அசூயையும் குரோதமும் நிறைந்த கண்களால் காபாலிகை மூர்ச்சையாய்க் கிடந்த சிவகாமியையும் புத்த பிக்ஷுவையும் மாற்றி மாற்றிப் பார்த்துவிட்டு, வேண்டா வெறுப்பாக வாசற் பக்கம் போவதற்குத் திரும்பினாள். அவள் திரும்பி இரண்டு அடி எடுத்து வைத்தாளோ இல்லையோ, புத்தபிக்ஷு கண்மூடித் திறக்கும் நேரத்தில் தம் இடுப்பில் செருகியிருந்த கத்தியைக் கையில் எடுத்தார். அவருடைய கையின் சக்தியையெல்லாம் பிரயோகித்துக் காபாலிகையின் முதுகில் அந்த விஷக் கத்தியைச் செலுத்தினார்.

“ஓ!” என்று அலறிக் கொண்டு காபாலிகை திரும்பினாள்.

“அடபாவி! சண்டாளா! கடைசியில் துரோகம் செய்து விட்டாயா?” என்று கத்திக்கொண்டு ரஞ்சனி நாகநந்திமேல் பாய்ந்தாள். அவர் சட்டென்று விலகிக் கொள்ளவே, தலைகுப்புறக் கீழே விழுந்தாள்.

மின்னல் மின்னி மறையும் நேரத்தில் நாகநந்தி தரையில் மூர்ச்சையாகிக் கிடந்த சிவகாமியைத் தூக்கித் தோளில் போட்டுக் கொண்டு வீட்டின் பின்புறத்தை நோக்கி விரைந்தார்.

* * *

கால வெள்ளத்தில் சிறிது பின்னுக்குச் சென்று, கண்ணபிரான் அந்த துர்க்கதிக்கு ஆளானது எப்படி என்பதைக் கவனிப்போம். பலபலவென்று கிழக்கு வெளுக்கும் நேரத்தில், வாதாபிக் கோட்டைக்குள்ளே, அதன் பிரதான மேற்கு வாசல் வழியாகப் பிரவேசித்த சேனாபதி பரஞ்சோதி, கோதண்டத்திலிருந்து விடுபட்ட இராம பாணத்தைப் போல் நேரே சிவகாமி இருந்த மாளிகையை நோக்கிச் செல்ல விரும்பினார். ஆனால் அது அவ்வளவு சுலபமான காரியமாயில்லை. நாலாபுறமும் தீப்பட்டு எரிந்து கொண்டிருந்த அந்த மாநகரத்தின் மக்கள் அலறிப் புடைத்துக் கொண்டும் அழுது புலம்பிக் கொண்டும் அங்கு மிங்கும் பித்துப் பிடித்தவர்கள் போல் ஓடிக் கொண்டிருந்தார்கள். கோட்டை மதில் மேலாக ஆங்காங்கு ஏறிக் குதித்து நகரத்துக்குள் புகுந்த பல்லவ பாண்டிய வீரர்கள் வாதாபியின் பெருஞ் செல்வத்தைக் கொள்ளையடிக்கும் வெறியினால் மதம் பிடித்தவர்களாய்த் தங்களைத் தடுத்தவர்களையெல்லாம் கொன்று வீழ்த்திக்கொண்டு அங்கு மிங்கும் ஓடினார்கள். தீப்பிடித்த வீடுகளின் மேற் கூரைகள் தடதடவென்று விழுந்து வீதிகளை அடைத்தன. தீயும் புகையும் படலம் படலமாகக் காற்றில் சுழன்று பரவின.

இத்தகைய இடையூறுகளையெல்லாம் தாண்டிக் கொண்டு சேனாபதி பரஞ்சோதி வாதாபி வீதிகளின் வழியாகச் செல்ல வேண்டியிருந்தது. ஒன்பது வருஷத்துக்கு முன்னால் அந்த நகரின் வீதிகளின் வழியாகச் சிவகாமியின் வீட்டுக்குச் சென்ற ஞாபகத்தைக் கொண்டு சுலபமாக இப்போது வழி கண்டு பிடித்துச் செல்லலாமென்று அவர் எதிர்பார்த்தார். அதுவும் அப்போது நகரில் ஏற்பட்டிருந்த குழப்பத்தினால் அவ்வளவு சுலபமாயில்லை. அவர் பின்னோடு ரதம் ஓட்டிக் கொண்டு வந்த கண்ணபிரானையும் அடிக்கடி வழி சரிதானா என்று கேட்டுக் கொள்ள வேண்டியதாயிருந்தது.

கடைசியாக, சிவகாமியின் மாளிகை இருந்த வீதியைச் சேனாபதி அடைந்த சமயம் சூரியோதயம் ஆகி விட்டது. அந்த வீதி முனைக்கு வந்தபோது ஒரு பெருங் கூட்டம் அங்கிருந்து பெயர்ந்து செல்வதை அவர் பார்த்தார். ரிஷபக் கொடியுடன் கூடிய பல்லவ வீரர்களின் வருகையைக் கண்டதும் எதிரில் வந்த ஜனங்கள் பீதியடைந்து நாலா பக்கமும் சிதறி ஓடினார்கள்.

சிவகாமி இருந்த மாளிகை வாசலைப் பரஞ்சோதி அடைந்ததும், அந்த வாசலும் வீதியும் நிர்மானுஷ்யமாயிருப்பதைக் கண்டார். அந்தக் காட்சி அவருடைய உள்ளத்தில் ஒரு விதத் திகிலை உண்டாக்கியது. வீட்டின் வெளிக் கதவு சாத்தியிருந்தது. வீட்டுக்குள்ளேயோ நிச்சப்தம் குடி கொண்டிருந்தது.

யாருக்காக, யாருடைய சபதத்தை நிறைவேற்றி அழைத்துச் செல்வதற்காக, இவ்வளவு பெரும் பிரயத்தனம் செய்து படையெடுத்து வந்தோமோ, அந்த ஆயனச் சிற்பியின் மகள் இந்த வீட்டுக்குள்ளே பத்திரமாயிருக்கிறாளா? அவளை உயிரோடு மீட்டுக் கொண்டுபோய்க் கோட்டை வாசலில்

காத்துக் கொண்டிருக்கும் ஆயனரிடம் ஒப்புவிக்கும் பாக்கியம் கிடைக்குமா? இப்படிச் சேனபதி பரஞ்சோதி எண்ணமிட்டுக் கொண்டிருக்கும் போது வீதியின் எதிர்ப்புறத்திலிருந்து சில பல்லவ வீரர்கள் ரிஷபக் கொடியுடன் விரைந்து குதிரைமேல் வருவது தெரிந்தது. அவர்கள் தமக்குத்தான் ஏதோ முக்கியமான செய்தி கொண்டு வருகிறார்கள் என்று பரஞ்சோதி ஊகித்துக்கொண்டு, பக்கத்தில் ரதத்திலிருந்து இறங்கி நின்ற கண்ணபிரானைப் பார்த்து, "கண்ணா! கதவைத் தட்டு! கதவு திறந்ததும் உள்ளே சென்று தேவியிடம் நாம் தான் வந்திருக்கிறோம், அவரை அழைத்துப் போவதற்கு என்று சொல்லு!" என்றார்.

அவ்விதமே கண்ணன் போய்க் கதவைத் தட்டினான். சிறிது நேரத்துக்கெல்லாம் கதவின் திட்டி வாசல் திறந்தது. கண்ணன் உள்ளே பிரவேசித்ததும் மறுபடியும் கதவு சாத்திக் கொண்டது.

அவசரமாக வந்த பல்லவ வீரர்களின் தலைவன் பரஞ்சோதி எதிர்பார்த்தது போலவே அவருக்கு ஒரு செய்தி கொண்டு வந்தான். செய்தி அனுப்பியவன் இலங்கை இளவரசன் மானவன்மன். சேனபதியின் கட்டளையின்படி மானவன்மன் பொறுக்கி எடுத்த வீரர்களுடன் வடக்குக் கோட்டை வாசல் வழியாகப் பிரவேசித்து வாதாபி அரண்மனையை அடைந்தான். அரண்மனையில் தீப் பிடிப்பதற்குள்ளே அதனுள் இருந்த விலை மதிப்பதற்கரிய செல்வங்களையெல்லாம் வெளியேற்றிவிட ஏற்பாடு செய்தான். ஆனால், அரண்மனைக்குள்ளும் வெளியிலும் எவ்வளவு தேடியும் வாதாபி சக்கரவர்த்தி அகப்படவில்லை. அரண்மனைக் காவலாளர்களை விசாரித்ததில், சக்கரவர்த்தி கடைசியாக அரண்மனை வாசலில் சளுக்க வீரர்களையெல்லாம் சேர்த்து எல்லாரையும் எப்படியாவது உயிர் தப்பிப் பிழைத்து நாசிகாபுரிக்கு வந்து சேரும்படி சொல்லிவிட்டுத் தாம் ஒரு சில வீரர்களுடன் தெற்குக் கோட்டை வாசலை நோக்கிச் சென்றதாகத் தெரிந்தது. ஆனால் தெற்குக் கோட்டை வாசலைக் கைப்பற்றிக் காவல் புரிந்த பல்லவ வீரர்கள் அந்த வழியாகச் சக்கரவர்த்தி வெளியேறவில்லையென்று உறுதியாகச் சொன்னார்கள்.

இதையெல்லாம் கேட்ட சேனபதிக்கு மனக் கிலேசம் முன்னைவிட அதிகமாயிற்று. வாதாபி சக்கரவர்த்தியாக வேஷம் பூண்டு நடித்தவர் நாகநந்திதான் என்பதை அவர் சத்ருக்னன் மூலம் தெரிந்து கொண்டிருந்தார் அல்லவா? விஷப் பாம்பை விடக் கொடிய அந்தப் பாதகன் ஒருவேளை சிவகாமியின் மூலமாகப் பல்லவர்மீது பழி தீர்த்துக் கொள்ள முயற்சிக்கலாமல்லவா? இந்த நிமிஷத்தில் ஒருவேளை அந்தக் கள்ள பிக்ஷு சிவகாமியைத் துன்புறுத்திக் கொண்டிருக்கிறானே, என்னமோ? அவனை யாரும் கண்டு பிடிக்க முடியாத இடத்தில் ஒளிக்கப் பார்க்கிறானோ, என்னமோ?

இந்தமாதிரி எண்ணங்கள் நெஞ்சத்தில் குமுறிக் கொந்தளிக்க, பரஞ்சோதி அந்த வீட்டின் வாசற் கதவை விரைந்து நெருங்கினார். அவர் கதவண்டை வந்த சமயம் உள்ளே எங்கேயோ யிருந்து 'வீல்' என்று ஒரு பெண்ணின் சோகக் குரல் கேட்டது.

பரஞ்சோதி வெறி பிடித்தவர் போலாகித் தமது பலம் முழுவதையும் பிரயோகித்துக் கதவைத் தள்ளித் திறக்க முயன்றார். அது முடியாமற் போகவே, "சீக்கிரம் கோடரி கொண்டு வந்து கதவைப் பிளவுங்கள்!" என்று கர்ஜித்தார். மறு கணமே ஐந்தாறு வீரர்கள் கையில் கோடரியுடன் வந்து கதவைப் பிளந்தார்கள். ஐந்து நிமிஷத்துக்கெல்லாம் கதவுகள் பிளந்து தடா ரென்று கீழே விழுந்தன.

திறந்த வாசலின் வழியாகப் பரஞ்சோதி உட்புகுந்து ஓடினார். அவரைத் தொடர்ந்து வேறு சில வீரர்களும் சென்றார்கள். முன்கட்டு முழுவதும் தேடியும் ஒருவரும் அகப்படவில்லை. பின் கட்டுக்குச் சென்றதும், ஒரு ஆணும் பெண்ணும் குத்திக் கொல்லப்பட்டுத் தரையிலே கிடந்த கோரமான காட்சி பரஞ்சோதியின் கண் முன்னால் காணப்பட்டது. ஆண் உருவத்தின் முகத்தைப் பார்த்ததும் கண்ணபிரான் என்று தெரிந்து போயிற்று. ஐயோ! கமலியின் கண

வன் கதி இப்படியா ஆகவேண்டும்?... ஆனால் அதைப் பற்றி அதிகம் சிந்திக்க அப்போது நேரமில்லை. அருகில் கிடந்த ஸ்திரீயின் மீது கவனம் சென்றது. அந்த உடல் குப்புறக் கிடந்தபடியால் யார் என்று தெரியவில்லை. ஒரு வேளை சிவகாமி தேவிதானோ என்னமோ! இருவரையும் கொன்று விட்டு அந்தப் பாதகன்......

பரஞ்சோதி தாம் இன்னது செய்கிறோம் என்று தெரியாமலே அந்தப் பெண் உடலைப் புரட்டி மல்லாக்க நிமிர்த்திப் போட்டார். முகத்தைப் பார்த்ததும் "சிவகாமி தேவி இல்லை" என்று தெரிந்து சிறிது ஆறுதல் ஏற்பட்டது.

பார்த்துக் கொண்டிருக்கும்போதே அந்த ஸ்திரீயின் உடம்பு அசைவதையும் பெரு மூச்சு வருவதையும் பார்த்துப் பரஞ்சோதி திடுக்கிட்டார்.

அடுத்த நிமிஷம் அவளுடைய செக்கச் சிவந்த கண்கள் பரஞ்சோதியை வெறித்து நோக்கின.

"ஆகா! மாமல்லன் நீதானா?" என்று அவளுடைய உதடுகள் முணுமுணுத்தன.

சிவகாமியைப் பற்றி அவளிடம் ஏதேனும் தெரிந்து கொள்ளலாம் என்ற ஆவலால் எழுந்த பரபரப்புடன், "ஆம், பெண்ணே! நான் மாமல்லன் தான்! நீ யார்? சிவகாமி தேவி எங்கே?" என்று கேட்டார்.

"இது என்ன கேள்வி? நான் தான் சிவகாமி, தெரியவில்லையா?" என்றாள் காபாலிகை. அப்போது அவள் முகத்தில் தோன்றிய கோரப் புன்னகை அவளுடைய முகத்தின் விகாரத்தைப் பன் மடங்காக்கிற்று.

ஒரு கண நேரம் பரஞ்சோதி திகைத்துப் போனார். நெடுங்காலம் சிறைப்பட்டிருந்த காரணத்தினால் சிவகாமி தேவிதான் இவ்விதம் சித்தப் பிரமை கொண்ட பித்தியாகி விட்டாளோ? சீச்சீ! ஒரு நாளும் அப்படி இராது. குண்டோதரன் ஒரு மாதத்துக்கு முன்புதான் சிவகாமியைப் பார்த்து விட்டு வந்தான் என்பதும், சத்ருக்னன் காபாலிகையைப் பற்றிக் கூறியதும் பரஞ்சோதிக்கு நினைவு வந்தது. அந்தக் காபாலிகைதான் குகை வழியாக இவ்விடம் வந்திருக்கிறாள் போலும்.

"சீ! ஏன் பொய் சொல்கிறாய்? நீ சிவகாமி இல்லை. சிவகாமி எங்கே என்று உண்மையைச் சொன்னால்..."

"உண்மையை நான் சொன்னால் நீ திருப்பி எனக்கு என்ன செய்வாய்?"

"உன் உயிரைக் காப்பாற்றுவேன்."

"ஆகா! விஷக் கத்தி பாய்ந்த என்னைக் காப்பாற்ற உன்னால் ஆகாது!"

"விஷக் கத்தியா? அப்படியானால் நாகநந்திதான் உன்னைக் கொன்றிருக்க வேண்டும்! ... பெண்ணே! சீக்கிரம் சொல்! நாகநந்தி எங்கே, எப்படிப் போனான்? சொன்னால் உனக்காக அவனைப் பழி வாங்குகிறேன்."

"நாகநந்தி மேல் பழி வாங்கி என்ன பிரயோஜனம்! அந்தக் கள்ள பிக்ஷு என்னைக் கொன்றது உண்மைதான். ஆனால் அவனைக் கொல்ல வில்லை. அந்த நீலி சிவகாமி தூண்டித்தான் கொன்றான்! பல்லவனே! நீ உன்னை மன்மதன் என்றுதான் நினைத்துக் கொண்டிருக்கிறாய். ஆனால், என்ன செய்வது? அந்த மூளி சிவகாமிக்கு உன்பேரில் ஆசை இல்லை. வறண்டு காய்ந்து எலும்பும் தோலுமாயிருக்கும் புத்த பிக்ஷுவின் பேரிலேதான் அவளுக்கு மோகம். நீ வருவதாகத் தெரிந்ததும் அவள்தான் நாகநந்தியை அழைத்துக் கொண்டு ஓடிவிட்டாள். நான் குறுக்கே நிற்பேனென்று என்னையும் கொல்லச் செய்தாள். எனக்காக நீ பழி வாங்குவதாயிருந்தால் சிவகாமியைப் பழி வாங்கு!......அந்த அசட்டுப் பிக்ஷுவை ஒன்றும் செய்யாதே!"

இந்த வார்த்தைகளெல்லாம் பரஞ்சோதியின் காதில் கர்ண கடூரமாக விழுந்தன. மேலே கேட்கச் சகியாமல், "பெண்ணே! அவர்கள் இருவரும் எங்கே இப்போது? எப்படிப் போனார்கள்? சீக்கிரம் சொல்லு!" என்று கூவினார்.

தன்னுடைய யுக்தி பலித்து விட்டது என்று எண்ணிய காபாலிகை, "கொல்லை முற்றத்துக் கிணற்றில் இறங்கிப் பார்! சுரங்கவழி அங்கே இருக்கிறது! சிவகாமியைப் பழி வாங்கு! ஞாபகம் இருக்கட்டும்!" என்று சொல்லிப் பேச்சை நிறுத்தினாள். அத்தோடு அவளுடைய மூச்சும் நின்றது.

# புத்தர் சந்நிதி

சேனாபதி பரஞ்சோதி தம்முடன் வந்திருந்த வீரர்களுக்கு அதி விரைவாகச் சில கட்டளைகளை இட்டார். அவர்களில் நாலு பேரை மட்டும் தம்மைத் தொடர்ந்து வரும்படி ஆக்ஞாபித்து விட்டு அந்த வீட்டின் கொல்லை முற்றத்தை நோக்கி விரைந்து சென்றார். முற்றத்தின் மத்தியில் பவள மல்லிகை மரத்தின் அருகில் இருந்த கிணற்றண்டை சென்று உட்புறம் எட்டிப் பார்த்தார். கிணற்றின் சுற்றுச் சுவர் கொஞ்ச தூரம் வரையில் செங்கல்லால் கட்டப்பட்டிருந்தது. அதற்குக் கீழே பாறையைப் பெயர்த்துத் தோண்டியிருந்தது. தண்ணீர் மிக ஆழத்தில் இருந்தது.



நெஞ்சு திக்கு திக்கு என்று அடித்துக் கொள்ள, பரஞ்சோதி அந்தக் கிணற்றுக்குள்ளே கைப்பிடிச் சுவரைப் பிடித்துக் கொண்டு இறங்கினார். அவருடன் மற்ற நால்வரும் இறங்கினார்கள். செங்கல் சுவரைத் தாண்டிப் பாறைச் சுவரை அவர்கள் எட்டிய பிறகு மேடும் பள்ளமும் பொக்கையும் போழையுமாக இருந்தபடியால் இறங்குவது சுலபமாயிருந்தது. கிணற்றின் முக்கால் பங்கு ஆழம் இறங்கியதும் பரஞ்சோதி 'ஆ!' என்று ஆச்சரிய சப்தம் இட்டார். அங்கே பாறைச் சுவரில் ஒரு பெரிய போழை இருந்தது. அது உள்ளே ஆழமாகச் சென்றதோடு சிறிது தூரத்துக்கப்பால் ஒரே இருட்டாகவும் காணப்பட்டது. பரஞ்சோதி தம்முடன் வந்த வீரர்களுக்குச் சமிக்ஞை செய்துவிட்டு, அந்தப் போழைக்குள் புகுந்தார். ஒரு ஆள் படுத்து ஊர்ந்து செல்லும் அளவிலேதான் அந்தத் துவாரம் இருந்தது. ஆனால் சிறிது தூரம் அவ்விதம் ஊர்ந்து சென்றதும் துவாரம் பெரிதாயிற்று. இன்னும் சிறிது தூரம் உட்கார்ந்தபடி நகர்ந்து சென்ற பிறகு காலில் படிக்கட்டுகள் தென்பட்டன. நாலைந்து படிக்கட்டுகளில் இறங்கியதும் சமதளத்துக்கு வந்திருப்பதாகத் தோன்றியது. முதலில் சிறிது நேரம் ஒரே இருட்டாயிருந்தது. கண்கள் இருளுக்குப் பழக்கமானதும் கொஞ்சம் சுற்றுப்புறத் தோற்றத்தைப் பார்க்க முடிந்தது. பூமிக்கு அடியில் பாறையைக் குடைந்து அமைத்த விஸ்தாரமான மண்டபத்தின் ஒரு ஓரத்தில் தாம் நிற்பதைப் பரஞ்சோதி அறிந்தார். அவர் நின்ற இடத்துக்கு நேர் எதிரே ஒரு பெரிய புத்தர் சிலை காட்சியளித்தது. புத்தர் சிலையின் மீது அழகிய வேலைப்பாடுள்ள விமானம் காணப்பட்டது. எதிரே இரு வரிசையாகப் பெரிய பெரிய பாறைத் தூண்கள் — நன்கு செதுக்கிச் செப்பனிடாத தூண்கள் — நின்றன. பரஞ்சோதியும் மற்ற இரு வீரர்களும் அந்த

ண்டபத்தில் அங்கு மிங்கும் சுற்றி லைந்து தூண் மறைவுகளிலும் மூலை முடுக்குகளிலும் தேடினார்கள். மனிதர் யாரும் தென்படவில்லை. ஆனால், ஒரு தூணின் மறைவில் சில உடைகளும் ஆபரணங்களும் கிடந்தன. அவை சக்கரவர்த்திக் குரியவை என்று கண்டதும் பரஞ்சோதி அவ்விடத்தில் நாகநந்தி இராஜரீக உடைகளைக் களைந்து சந்நியாசி உடை தரித்திருக்க வேண்டுமென்று தீர்மானித்தார். ஆனால் நாகநந்தியும் அவருடன் சென்ற சிவகாமியும் எங்கே? அங்கிருந்து எப்படி மாயமாய் மறைந்திருப்பார்கள்?

பரஞ்சோதியின் பார்வை தற்செயலாகப் புத்த பகவானுடைய சிலைமீது விழுந்தது. சட்டென்று அவருடைய மூளையில் ஒரு எண்ணம் உதித்தது. காஞ்சி இராஜ விஹாரத்தில் புத்தர் சிலைக்குப் பின்னால் இருந்த இரகசிய வழி ஞாபகத்துக்கு வந்தது. உடனே பரஞ்சோதி புத்தர் சிலையை நோக்கிப் பாய்ந்து சென்றார். ஆனால் இந்தச் சிலை பாறையின் பின் சுவரோடு ஒட்டியிருந்தது. சிலைக்குப் பின்னால் துவாரமோ இரகசிய வழியோ இருப்பதற்கு இடமே இல்லை.

பரஞ்சோதி பெரும் ஏமாற்றத்துக்குள்ளானார். ஆயினும் தாம் தேடும் வழியின் இரகசியம் இந்தச் சிலையிலேதான் இருக்க வேண்டும் என்ற எண்ணம் அவர் மனதை விட்டு அகலவில்லை.

"பிரபு! புத்த பகவானே! மகா விஷ்ணுவின் மாயாவதாரம் தாங்கள் என்று நான் கேள்விப் பட்டது உண்மையானால் இச் சமயம் எனக்கு வழி காட்ட வேண்டும். தங்களுடைய பாதாரவிந்தமே கதி!" என்று நினைத்த வண்ணம் சேனாபதி புத்தர் சிலையின் பாதங்களைத் தொட்டார். தொட்டதுதான் தாமதம், உடனே ஒரு அற்புதம் நிகழ்ந்தது. அதாவது புத்தர் சிலை தன் இடம் விட்டுப் பெயர்ந்தது. ஒரு பக்கமாகச் சிறிது நகர்ந்தது. பின்புறத்துப் பாறைச் சுவரிலே எதிர்பார்த்தபடி சுரங்க வழியும் காணப்பட்டது. "ஆகா! புத்த பகவான் வழி விட்டார்!" என்ற குதூகலமான எண்ணத்துடன் மற்ற வீரர்களுக்குச் சமிக்ஞை செய்து விட்டுப் பரஞ்சோதி சுரங்க வழியில் பிரவேசித்து ஒரு அடி எடுத்து வைத்தார். அப்போது அவர் எதிரிலே அந்தச் சுரங்கவழியிலே அவர் சற்றும் எதிர்பாராத மிக ஆச்சரியமான காட்சியைக் கண்டார்.

ஒன்றன்பின் ஒன்றாகப் பல தீவர்த்திகள் அந்தக் குறுகிய சுரங்க வழியில் வந்து கொண்டிருந்தன. அவற்றை எடுத்துக் கொண்டு வந்த மனிதர்கள் கன்னங் கரிய கொள்ளிவாய்ப்



பிசாசுகள் போல் தோன்றினார்கள். அந்தப் பயங்கர ஊர்வலத்துக்கு முன்னால் சிறிது தூரத்தில் தலை மொட்டையடித்த பிக்ஷு உருவம் ஒன்று தோளிலே ஒரு பெண்ணைத் தூக்கிப் போட்டுக்கொண்டு அதி விரைவாக ஓட்டம் ஓட்டமாக வந்து கொண்டிருந்தது.

பரஞ்சோதிக்கு அப்படி வருகிறவர்கள் யார் என்ற விவரம் ஒரு நொடியில் விளங்கி விட்டது. புத்த பிக்ஷு சுரங்க வழியில் பாதி தூரம் போவதற்குள்ளே சத்ருக்னன் தன் ஆட்களுடன் மற்றொரு பக்கத்தில் புகுந்து வந்திருக்கிறான். அவனிடம் அகப்பட்டுக் கொள்ளாமல் தப்பிக்கப் புத்தபிக்ஷு திரும்பி ஓடி வருகிறார்.

பரஞ்சோதி மறு விநாடியே புத்த பகவான் காண்பித்த வழியிலிருந்து வெளியே வந்தார். அவரும் மற்ற வீரர்களும் பாய்ந்தோடி பாறைத் தூண்களின் பின்னால் மறைந்து நின்றார்கள்.

அவ்விதம் அவர்கள் மறைந்து கொண்ட சிறிது நேரத்துக் கெல்லாம் நாகநந்தி பிக்ஷு புத்த பகவானுடைய சிலைக்குப் பின்புறமிருந்து வெளிப்பட்டார். தோள்மீது சிவகாமியைச் சுமந்து கொண்டுவந்தார். பரஞ்சோதியும் அவருடைய வீரர்களும் மூச்சுக் கூடக் கெட்டியாக விடாமல் அவர் என்ன செய்யப்போகிறார் என்று பார்த்துக்கொண்டு நின்றார்கள்.

நாகநந்தி புத்தர் சிலைக்கு எதிரில் சற்றுத் தூரத்தில் சிவகாமியைத் தரையிலே கிடத்திவிட்டு எழுந்தார். புத்தர் சிலையண்டை சென்று நின்றார். ஒரு நிமிஷம் அவர் ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருந்ததாகத் தோன்றியது. ஒரு தடவை சுற்று முற்றும் பார்த்தார். பிறகு, சிலையின் அருகாமையில் சென்று உட்கார்ந்தார்.

சுரங்க வழியை அடைத்து விடுவது தான் அவருடைய நோக்கம் என்பது பரஞ்சோதிக்குப் புலப்பட்டு விட்டது. தம் அருகில் நின்ற வீரர்களுக்குச் சமிக்ஞை செய்துவிட்டு ஒரே பாய்ச்சலில் பிக்ஷுவின் அருகில் சென்றார். மற்ற வீரர்களும் வந்து சேர்ந்தார்கள். பிக்ஷுவின் இரு கரங்களையும் கெட்டியாகப் பிடித்துக் கொண்டார்கள். பிக்ஷு திரும்பி அவர்களை ஏறிட்டுப் பார்த்தா[r] இருட்டில் அவருடைய முகபாவ[ம்] ஒன்றும் தெரியவில்லை. ஆயினு[ம்] உடனே அவர் கூறிய வார்த்தைக[ள்] அவர் மனோநிலையை வெளிப்படுத்தின[.]

"அப்பா! பரஞ்சோதி! நீதானா[?] உன்னை எதிர்பார்த்துக் கொண்டுத[ா]னிருந்தேன். நான் தோற்றால் உன்னிடந்தான் தோற்க வேண்டுமென்பது என் மனோரதம். அது நிறை வேறிவிட்டது!" என்று சொல்லி[க்] கொண்டே எழுந்து நின்றார். எல்லோரும் மண்டபத்தின் நடு மத்திக்கு வந்தார்கள். நாகநந்தி பரஞ்சோதியை இரக்கம் ததும்பிய கண்களுடனே பார்த்து, "அப்பனே! இன்னும் எத[ற்]காக இவர்கள் என்னைப் பிடித்துக் கொண்டிருக்கிறார்கள்? இனி எங்கே நான் தப்பி ஓட முடியும்? அந்தப் பக்கத்திலும் உன் ஆள்கள் வரு[]கிறார்கள். இந்தப் பக்கமும் உன் ஆள்கள் நிற்பார்கள். என் ஆட்டபாட்டமெல்லாம் முடிந்து விட்டது. இனிமேல் நீ சொன்னபடி நான் கேட்க வேண்டியதுதான். உன்னையும் ஆயனரையும் மாமல்லரையும் எப்படியாவது அஜந்தாவுக்கு வரச் செய்ய வேண்டும் என்று பார்த்தேன். அது முடியாமற் போயிற்று. அப்பனே! என்னை விட்டு விடச் சொல்லு! நீ சொல்லுகிறதைக் கேட்டு அந்தப் படியே நடக்கச் சித்தமாயிருக்கிறேன்."

இவ்விதம் நாகநந்தி கெஞ்சியது பரஞ்சோதியின் மனதில் இரக்கத்தை உண்டாக்கியது.

"பிக்ஷுவை விடுங்கள்!" என்று வீரர்களுக்குக் கட்டளையிட்டார்.

வீரர்கள் நாகநந்தியை விட்டுவிட்டுச் சற்று அப்பால் சென்றார்கள்.

"அப்பனே! அந்தப் பழைய காலமெல்லாம் உனக்கு ஞாபகம் இருக்கிறதா? காஞ்சி நகரத்தில் நீ பிர[]வேசித்த அன்று உன்னைப் பாம்பு தீண்டாமல் காப்பாற்றினேனே? அன்றிரவு உன்னைச் சிறைச்சாலையிலிருந்து தப்புவித்தேனே? அதெல்லாம் ஞாபகம் இருக்கிறதா?..."

இவ்விதம் பேசிக்கொண்டே, கண் மூடித் திறக்கும் நேரத்தில் நாகநந்தி தமது இடுப்பு ஆடையில் செருகியிருந்த கத்தியை எடுத்தார்.

# வானசஞ்சாரம்

இசைத்தேனீ

வெகு நாளாய் ரேடியோ நிலையங்களில் கேட்டிராத அரிய நாதஸ்வரக் கச்சேரி மேமீ 24ல் திருச்சியில் நடந்தது. வாசித்தவர் திருவிடமருதூர் பி. எஸ். வீருசாமி பிள்ளை. பல வருஷங்களைப் பழுத்த அனுபவமும், புகழும் கொண்ட வீவியர் வித்வானாய் இலங்குவதோடு, ஞானத்திலும் தொழில் முறையிலும் பெரும் மதிப்பு வாய்ந்து, கலைக்குப் பெருமையளிக்கும் தலைவர்களில் ஒருவர். அவர் சங்கீதமும் கூடுப் பாடாமல் நிலைத்து நிற்கும் பாணியழகும் கம்பீர வழியும் கொண்டு கேட்போரை எளிதில் வசீகரிக்கும் தன்மையது. மணிக் கணக்காய்ச் சளையாது ராகங்களை மன முருகப் பொழிவதில் கைதேர்ந்தவர். அன்று பந்துவராளி, தோடி, பல்லவி ராகமாம் காம்போதி, ஹம்ஸாநந்தி இவைகள் கர்ணாமிருதமாய் இழைந்து வந்தன.

23ல் சென்னையில் எஸ். ராஜத்தின் கச்சேரி உயர்ந்த ரகமா யிருந்தது. வயலினுக்குப் பதிலாகப் புல்லாங்குழல் அவருக்குப் பக்க வாத்யமாய் அமைந்தது விசேஷம். ஹம்ஸ நாதம், சக்ரவாகம், மோஹன ராகங்கள் விஸ்தாரமாயும், கமகப் பொலிவுடனும் இழைந்திலங்கின. 'பண்டுரீதி' கிருதியில் விழுந்த சங்கதிகள் வனப்பு மிகுந்திருந்தன.

அன்று அதே நிலையத்தில் வி. என். ராஜலக்ஷ்மியின் கானமும் சிறப்பா யிருந்தது. இனிமையும் போதிய காத்திரமும் கொண்ட குரலில் ஒழுங்கான முறையில் பைரவி ராகத்தையும், 'கொலுவையுன்னாடே' கிருதி நிரவல் ஸ்வரங்களையும் கையாண்டார்.

24ல் திருச்சியில் கே. வி. நடராஜனின் நய சாரீரத்திலிருந்து நல்ல பாவத்துடன் வெளி வந்த தன்யாசி, கரஹரப்ரியா, ஹிந்தோள ராகங்கள் தரமா யிருந்தன.

25ல் சென்னையில் பாடிய மாயவரம் கணேசனுக்கு நடுத்தரக் குரல். ஆரபி, காம்போதி, கானடா ராகங்களைத் திறம்பட வழங்கினார்.

26ல் சென்னையில் பாடிய எம். நீலகண்டய்யரின் சங்கீத ஞானமும் வழியும் குறிப்பிடத் தக்கவை. சங்கராபரணம், கவி ராகங்களும் உருப்படிகளும் உயரிய ரஸனைப் பொருத்தங்களுடன் அழகா யிருந்தன.

* * *

மே மாதம் 30ல் சென்னையில் நடந்த டி. ஆர். பாலசுப்ரமணியத்தின் கச்சேரி சென்ற வாரத்திய முதல்தர நிகழ்ச்சிகளில் ஒன்று. நய சாரீரம், நல்ல உதவுபாடு. காம்போதி ராகத்தை விஸ்தாரமாய் வாரி யள்ளினார். இரண்டொரு நவீன சங்கதிகள் மாத்திரம் அந்த ராகத்துக்குப் பொருத்தமாகத் தோன்றவில்லை. ஜோதிஸ்வரூபிணி ராகமும், 'கானமுத பானம்' கிருதியும் வெகு சுகமா யிருந்தன.

31ல் திருச்சியில் பாடிய டி. கே. கோபாலகிருஷ்ணய்யங்காருக்கு மதுரமான குரல். ஆபோகியும், கமாஸும் வெகு தேர்த்தியா யிருந்தன. கரஹரப்ரியா, ஆரபி ராகங்களை அடுத்த படியாகச் சொல்லலாம். கிருதிகளும் ஸ்வரப்ரஸ்தாரங்களும் பிருகா யிருந்தன.

அன்று சென்னையில் நடந்த 'குலசேகரன்' என்ற நாடகத்தில் கதையும் நடிப்பும் ஜோரா யிருந்தன. ஆனால் பாட்டுக்கள் போதியவாறு உயர்ந்த ரகமாயில்லை.

ஜூன் 1ல் சென்னையில் எம். ஜி. கௌரி குமாரியின் வீணா கானத்தைக் கேட்டவர்கள், அதைப் பாராட்டாம லிருக்கமுடியாது. வாத்தியத்துடன் இழைந்த வாய்ப்பாட்டும் அழகா யிருந்தது. விஜயநாகரி, ஸ்ரீரஞ்சனி ராகங்களை எடுத்தவுடன் ஸ்வரூபம் நன்கு தெரியும் படிக்கும், கமகப் புஷ்டியுடனும், அழுத்தமாயும், உணர்ச்சி ததும்ப வாசித்தார். வெகு நாளைக்கான மீட்டு. உருப்படிகளும், ஸ்வர ப்ரஸ்தாரங்களும் சிறந்த லயப்புடன் கச்சிதமாயு மிருந்தன. முழு நேரக் கச்சேரிக்கு லாயக்கான வாசிப்பு.

2ல் சென்னையில் டி. செல்லையய்யங்கார், எதிர்பார்த்தபடி வெகு ஜோராய்க் கச்சேரி செய்தார். ஜீவன் நிறைந்த சாரீரம் படைத்தவர். அநேகமாய் அரியக்குடி பாணி. கற்பனைகளையும், ஸ்தாயி சஞ்சாரங்களையும் வெகு சரளமாய்ப் பொழியும் தன்மையது. சுத்த சாவேரி, பைரவி, பேகடா ராகங்களையும் உருப்படிகளையும் அதி வனப்பாய் வழங்கினார். முன்னணிக்கு வரும் ஞானமும் தேர்ச்சியு முடையவர் என்பதில் சந்தேகமில்லை.

அன்று சென்னையில் மற்றொரு இளம் வித்வானின் பாட்டும் உயர்ந்த ரகமா யிருந்தது. பாடியவர் என்னபாடம் ராமச்சந்திரன். நய சாரீரமும், அபூர்வ சாதகமும் கொண்டு, கல்யாணி, தன்யாசி, ராகங்களைச் சக்கைப் போடு போட்டார்.

2ல் திருச்சியில் கே. எஸ். நாராயணஸ்வாமி அய்யரின் வீணைக் கச்சேரியில் வாசஸ்பதி, வராளி, சங்கராபரணம், உசேனி ராகங்கள் நல்வடிவங்களா யிருந்தன.

3ல் காலை திருச்சியிலிருந்து கீரனூர் வைத்தியநாதன் பிள்ளை, கோவிந்தசாமி பிள்ளை இவர்களின் நாதஸ்வர கானம் வெகு சுகமாய்க் காதை நிரப்பியது. கீரவாணி, சுத்த சாவேரி ராகங்கள் அழகா யிருந்தன.

3ல் இரவு திருச்சியில் என். வி. வஸந்த கோகிலத்தின் முழு நேரக் கச்சேரி. இனிமையான குரல். உணர்ச்சி நிறைந்த கானம். மத்யமாவதி, அடாணா, ஸிம்மேந்திர மத்யம ராகங்களையும், ஒரு ராகமாலிகையையும் அழகு சஞ்சாரங்களுடனும் குளிர்ந்த கார்வைகளுடனும் நிதானமாய்ப் பொழிந்தார். 'உண்டேன்று' 'விஜயகுனி' உருப்படிகளில் நிரவல் ஸ்வரங்கள் நன்றா யிருந்தன.

அன்று சென்னையில் பாடிய எம். கன்னனுக்கு நடுத்தர சாரீரமாயினும், சாதகச் சிறப்பினால் சுருதி சுத்தமாயும் மதுரமாயும் அமைத்துக் கொண்டு, பந்துவராளி ராகத்தையும் 'பர்வத குமாரி' கிருதியையும் வழங்கினார்.

# கம்பர் தரும் காட்சி

டி. கே. சி.

## 144. காடுவெட்டி ராமன்!

(சூர்ப்பனகையால் எத்தனையோ காரியங்கள் நடக்கின்றன. பதினான்கு அரக்கர் படைத் தலைவர்கள் இறந்தார்கள். திரிசிரா இறந்தான். தூஷணனும் ராமனுடைய அம்புக்கு இரையானான். அவனுடைய சேனையும் மிச்சம் இல்லாமல் அறுபட்டு விழுந்தன.

தம்பி தூஷணனும் சேனையும் அழிந்து போனதை அறிந்தான் கரன். அதை நம்பவே முடியவில்லை அவனுக்கு. கோபம் அபாரமாய் வந்து விட்டது.

சந்தம்

தான னன தன்ன னன
தன்ன னன தன் ன

தம்பி தலை அற்ற படி
யும்,த யர தன் சேய்
அம்பு, படை யைத்து ணி
படுத்த தும்,அ ழிந் தான்;
வெம்பு படை விற்கை விச
யக்க ரன்வெ குண் டான்!
கொம்பு தலை கட்டி ய
குலக்க ரியோ டொப் பான்.

[தம்பிதலை அற்ற படியும்: தம்பியாகிய தூஷணனது தலை அற்ற செய்தியையும்; தசரதன் சேய் அம்பு படையைத் துணி படுத்ததும்: சக்கரவர்த்தி மகனாக அவதரித்த ராமன் அம்பு கொண்டு படைகளை எல்லாம் அறுத் தெறிந்த செய்தியையும்; வெம்பு படை விற்கை விசயக் கரன் வெகுண்டான்: கொடிய ஆயுதங்களையும் வில்லையும் கையில் ஏந்தியவனும் சதா வெற்றியே அடைந்து வந்த கரன் கோபாவேசத்துக்கு உள்ளானான்; கொம்பு தலை கட்டிய குலக்கரியோடு ஒப்பான்: இருபெரும் தந்தங்களைத் தலையில் வைத்துக் கட்டியது போலுள்ள பெரிய யானையை ஒத்தவனும்.

குறிப்பு:—யுத்தத்துக்கு அதிகாரியான கரன் வருகிறான் என்று ஆரம்பிக்கும்போது செய்யுளுக்குத் தனியான துள்ளல் வருகிறது: 'கொம்புதலை கட்டிய குலக்கரி' என்று சொல்லும்போது கரனது பெருமித உருவமும் உடல்வலியும் நம் கண் முன் வருகின்றன.]

கரனுடைய படை என்றால் வெறும் காலாட் படை மாத்திரமா? யானைகள் என்ன, குதிரைகள் என்ன, தேர்கள் தான் என்ன, அளவில்லாத அத்தனை படைகளும் நாலா திசையையும் பரப்பிக் கொண்டு சூழ்ந்து வந்தன. ஏதோ மேகக் குழாங்கள் சந்திரனைச் சூழ்ந்து கொள்ளுவதற்காகக் கும்பல் கும்பலாக வந்தமாதிரி இருந்தது. பார்த்தால் எமனும் பயந்து போவான்.

அந்த கனும் உட்கி ட,
அரக்கர் கட லொ டும்
சிந்து ரம்,வ் யப்பு ரவி
தேர்,தி சைப ரப் பி,
இந்து வைவ ளைக்கும் எழி—
லிக்கு லம்எ னத் தான்,
வந்து வரி விற்கை யின்
மடங்க லைவ ளைத் தான்.

[அந்தகனும் உட்கிட: எமனும் பயப்படும்படி; அரக்கர் கடலோடும்: காலாட் படையாகிய கருங்கடலோடும்; சிந்துரம்: யானை; வயப்புரவி: வலிய குதிரை; இந்துவை வளைக்கும்: சந்திரனைச் சூழ்ந்து கொள்ளத் திரண்டு வரும்; எழிலிக்குலம் என: மேகக் குழாம் என்று சொல்லும்படியாக; வரி விற்கையின் மடங்கலை: நரம்புகொண்டு இறுகக் கட்டிய வில்லைக் கையில் ஏந்திய சிம்மமான ராமனை.]

மேலே சொன்னபடி அரக்கர்கள் அடர்ந்து வருகிறார்கள். யானைமேலிருந்தும் தேர்மேலிருந்தும் குதிரைமேலிருந்தும் வாள், ஈட்டி, சூலம் முதலிய பல வகைப் பட்ட ஆயுதங்களைக் கொண்டு கொடிய கொடிய விதமாகப் போர் செய்ய ஆரம்பிக்கிறார்கள். அதை எல்லாம் பார்த்தால், பூமி மாத்திரம் அல்ல, பூமியைத் தாங்கும் ஆதிசேஷனது படமே இழிந்து போய் விடுமோ என்று எண்ணத் தோன்றும்.

அடங்க வில்கொ டுந்தொ ழில்
அரக்கர் அவ்அ ளந் தன்
படங்கி ழிந்த ரப்,ப டி
தனிப்ப லவி தப் போர்

கடங்க ளுழ்ந்த டங்க ளிறு
தேர்ப் ரிக டா வித்

தொடங்கி னர்,நெ டுந்த கையும்
வெங்க ணைது ரந் தான்.

[அடங்கல் இல் கொடுந்தொழில் அரக்கர்: யாராலும் அடக்க முடியாத கொடுமையான போர் செய்யும் அரக்கர்; அவ் அனந்தன் படம் இழிதர: அந்த ஆதிசேஷனது படமே இழியும்படி; படிதனில்: பூமியில்; கடம் கலுழ் தடம் களிறு: மதஜலம் கொட்டும் பல யானைகளையும்; தேர்: தேர்களையும்; பரி: குதிரைகளையும்; கடாவித் தொடங்கினர்: நடத்தித் தொடங்கினார்கள்—போர்; நெடுந் தகையும் வெம்கணை துரந்தான்: இட நேகத் தோடு கூடிய ராமனும் அம்புகளை எவினான்.

குறிப்பு:—எதிர்ப் பக்கத்தில் தேர், யானை, குதிரை வாகனங்கள். ஆயுதங்கள் எத்தனையோ! வீரர்களையோ எண்ணித் தொலையாது. இவ்வளவும் சேர்ந்து வெகு பொல்லாத போர் புரிகிறார்கள். இந்தப் பக்கத்திலே ராமன் ஒருவன்தான்: ஆயுதம் எல்லாம் அம்புதான். வேறொன்றும் இல்லை என்ற ஹாஸ்ய பாவத்தை வைத்திருக்கிறது.]

அரக்கர்கள் பெரிய பெரிய உருவத்தினராய் மரம் அடர்ந்த காடுபோல நிற்கிறார்கள். அந்தக் காட்டுக்குள்ளே காடுகள் பல: வாள்க்காடு, வேல்க்காடு, தோள்க் காடு. வாள், வேல், தோள் இவைகள் அவ்வளவு அடர்ந்து காணப்படுகின்றன.

வாளின் வனம், வேலின் வனம்,
வார்சி லைவ னம், நின்

தோளின் வனம், என்றி வை
துவன்றி நிரு தப் போர்

ஆளின் வனம், ஆகி அவண்
நின்ற தனை,— அம் பாம்

கோளின் வனம் கொண்டு கடி—
தில்க்கு றைப டுத் தான்.

[இவை துவன்றி நிருதப் போர் ஆளின் வனம்: இவைகளெல்லாம் நெருங்கித் தோன்ற அரக்கரான பெரிய மனிதக் காடு; அம்பாம் கோளின் வனம்; அம்புகள் தொகுதி தொகுதியாகச் சென்றது. தூமகேதுகள் தொகுதி தொகுதியாகச் சென்றதுபோல் இருந்தது; கோள்: தூமகேது; கடிதில் குறை படுத்தான்: வெகு சீக்கிரத்தில் இல்லாமல் ஆக்கி விட்டான்.]

கவிஞருக்கு யுத்தம் என்றால் ஆவேசமே வந்து விடுகிறது. யுத்த நிறுத்தக் கொள்கை பிடிக்கவே பிடிக்காது போல் இருக்கிறது அவருக்கு! செய்யுள் கவிஞரது வீராவேச உணர்ச்சியை அழகாய்க் காட்டுகிறது.

# பத்தாயிரம் ரூபாய்ப் பரிசு

ஸோமாஸ்

பக்கிரியிலிருந்து பணக்காரன் வரையில் பக்கிரிசாமியைத் தெரியாதவர் இல்லை. பிரபல பிரமுகர்களின் பெயர்களைப் போலவே பக்கிரிசாமியின் பெயரும் பத்திரிகைகளில் எல்லாம் நாள் தவறாமல் வரும். பெரிய மனிதர்களின் சுற்றுப் பிரயாணம் போலவே பக்கிரிசாமியின் சுற்றுப் பிரயாணமும் வேகமும் விறுவிறுப்பும் கொண்டதாகவே யிருந்தது.

'ராவ்சாஹிப் ராமச்சந்திர ஐயர் அவர்கள் திருச்சியில் நடக்கும் மாபெரும் தொழிலாளர் கூட்டத்தில் ஒரு சொற்பொழிவு ஆற்றிவிட்டு, மாலை உதகமண்டலம் செல்வார். உதகமண்டலம் உருளைக் கிழங்கு பயிரிடுவோர் சங்கத்தில் தலைமை வகித்து விட்டுச் சென்னை சென்று, சென்னை மீன் பிடிப்போர் சங்க மகாநாட்டைத் திறந்து வைப்பார்' என்று பெரிய மனிதர்களைப் பற்றித் தொடர்கதை மாதிரி செய்திகள் வருவதுபோல் பக்கிரிசாமியைப் பற்றியும் செய்திகள் வரும்.

'திருப்பூரில் நடந்த திடுக்கிடும் திருட்டையும், பரமக்குடியில் நடந்த பயங்கரத் திருட்டையும், தூத்துக்குடியில் நடந்த துணிகரக் கொள்ளையையும் பற்றி விசாரித்ததில் மேற்படி மூன்று திருட்டுகளிலும் பக்கிரிசாமி சம்பந்தப்பட்டிருப்பதாகத் தெரிகிறது' என்பது போன்ற செய்திகள் பத்திரிகைகளில் அடிக்கடி பிரசுரமாகும்.

பக்கிரிசாமியின் பிரதாபம் அதிகரிக்க அதிகரிக்கப் போலீஸ்காரர்களுக்கும் கஷ்டம் அதிகரித்தது. பொது ஜனங்கள் போலீஸ் இலாகாவுக்கே மாசு கற்பித்துப் பேசத் தொடங்கினர். கடைசியில் பல நாள் திருடன் ஒரு நாள் அகப்பட்டான்.

பக்கிரிசாமி பார்க்கப் பார்க்க விழித்துக் கொண்டு சிறைச்சாலைக்குள்ளேயே அடைந்து கிடந்து விடவில்லை. தன்னுடைய அபார சாமர்த்தியத்தினால் காவலர்களுக்கும் 'டிமிக்கி' கொடுத்துவிட்டு வெளியேறிவிட்டான். சென்னை, ஞானப் புலவர்கள் பக்கிரிசாமியின் வீர தீரங்களைப் பற்றிப் பாடல் பாடி அவனுக்குப் பெரும் புகழ் தேடித் தந்தனர். பக்கிரிசாமி சரித்திரப் பிரசித்தி பெற்ற பெரிய மனிதனாகி விட்டான்.

'பக்காத்திருடன் பக்கிரிசாமியைப் பிடித்துத் தருபவர்களுக்குப் பத்தாயிரம் ரூபாய்ப் பரிசு!'—என்று பத்திரிகைகளிலும் வீதிச் சுவர்களிலும் பக்கிரிசாமியின் உருவப்படத்துடன் விளம்பரம் காணப்பட்டது.

மாலை வேளை. கான்ஸ்டபிள் கண்ணாயிரம் சிந்தனை தேக்கிய முகத்துடன் நடந்து போய்க்கொண்டிருந்தான். அவன் சிந்தனைத் திரையில் நடமாடிய கதாநாயகன் பக்கிரிசாமிதான். எப்படியாவது அவனைக் கண்டு பிடித்து உத்தியோகத்தில் நல்ல பெயர் பெற வேண்டும் என்னும் ஆசை அவன் மனத்தை அரித்துக் கொண்டிருந்தது.

அந்தச் சமயம் தெருவோடு போய்க் கொண்டிருந்த இரண்டு சிறு பையன்கள் கான்ஸ்டபிள் கண்ணாயிரத்தின் கவனத்தை இழுத்தனர். பக்கிரிசாமியைப் பற்றிய விளம்பரத்தைப் பார்த்துக் கொண்டே ஏதோ பேசிக்கொண்டிருந்தனர்.

“டேய், கண்ணா! நீ என்னமோ உங்க அப்பனைப் பத்திப் பிரமாதமாய்ப் பேசிக்கிறியே! எங்க அப்பாவைப் பாத்தியாடா? எப்படி யிருக்காரு?” என்று சொல்லிக் கொண்டே அந்த விளம்பரத்திலுள்ள பக்கிரிசாமியின் படத்தைச் சுட்டிக் காட்டினான் அவர்களில் ஒரு பையன்.

ஒரு விநாடியில் கான்ஸ்டபிள் கண்ணாயிரம் பக்கிரிசாமியின் பிள்ளை முத்துவைப் போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துச் சென்றான். அப்புறம் பக்கிரிசாமியைக் கண்டு பிடித்துக் கைது செய்வதில் போலீஸாருக்கு எவ்விதக் கஷ்டமும் இருக்கவில்லை. பக்கிரிசாமி மறுபடியும் அகப்பட்டுக் கொண்ட செய்தியை ஆரவாரத்துடன் வரவேற்ற பொது ஜனங்களுக்கு இன்னொரு நவமான செய்தி காத்திருந்தது.

பக்காத் திருடன் பக்கிரிசாமியைக் கண்டு பிடித்துக் கொடுத்ததற்காக அவன் பத்து வயது மகன் முத்துவுக்குப் பத்தாயிரம் ரூபாய்ப் பரிசு கிடைத்தது!

# அழகும் அன்பும்




வி. ஆர். ஆர். மணி

சாரதை தலை குனிந்தபடி நடந்து வந்து ரங்கநாதனையும் அவன் சித்தப்பா டாக்டர் சிவராம கிருஷ்ணனையும் நமஸ்கரித்தாள். இதைப்போல, சென்ற ஐந்து வருஷங்களாக, அவள் எத்தனையோ பேருக்கு நமஸ்கரித்திருக்கிறாள். ஆனால் இன்று ஏற்பட்ட நம்பிக்கையையும் புளகாங்கிதத்தையும் போல் அவள் என்றும் அனுபவித்ததில்லை.

ரங்கநாதனின் மனோநிலை முற்றும் வேறு மாதிரியாக இருந்தது. அம்மைத் தழும்புகள் நிறைந்த அவள் முகத்தை இன்னொரு தரம் பார்க்கப் பிடிக்கவில்லை; பயமாய்க் கூட இருந்தது. அவளுடைய பெரிய விழிகள் அவனை வெருட்டின. பாயி ஓரத்தைப் பார்த்தபடி கவனத்தை வே பக்கம் திருப்ப முயன்றான்.

சாரதை பாட ஆரம்பித்தாள். ரங்கநா னுக்குத் தலையை வலிக்கவில்லை, சுழன்ற பார்வையை முற்றத்தின் பக்கம் திருப் னான். முற்றத்திலிருந்து தெரிந்த மா ஜன்னலின்மேல் அவன் பார்வை விழு ந்தது. ஜன்னலருகே கம்பியைப் பிடித்து கொண்டு ஒரு பெண் கீழ நடப்பவைகளை கவனித்துக் கொண்டிருந்தாள். ரங்கநாத ஒரு விநாடி தன்னையே மறந்து போ அவளைப் பார்த்தான். பிறகு சட்டென் வேறு பக்கம் பார்த்தான்.

சாரதையின் தகப்பனாரின் கண்களுக் ரங்கநாதனின் கண்ணோட்டம் தப்பவில்லை அவர் உடனே உள்ளே கதவோரமா நின்றிருந்த சகதர்மிணியைப் பார்த்தா ஜன்னல் பக்கம் கண்ணைக் காட்டிச் சைகை செய்தார். உடனே அவள் அங்கிருந் மறைந்தாள்.

சர்வ ஜாக்கிரதையுடன் ரங்கநாதன் இ ன்னொரு முறை ஜன்னல் பக்கம் பார்த் போது, அந்தப் பெண்ணை அங்கே கா வில்லை.

* * *

"அடி அக்கா, உனக்கு ரொம்ப துரோகம் செய்து விட்டேன்!" என் கூறிக்கொண்டே சுந்தரி, சாரதையி மடியில் சாய்ந்தாள்.

சாரதை திடுக்கிட்டு அவளைத் தூக் நிறுத்தி, "என்னடி விஷயம்?" என்றாள்.

"மூர்த்தாசான் அவர்கள் வந்திருந்தபோது பயித்தியக்காரத்தனமாய் ஒரு காரிய செய்துவிட்டேன். அவர் அத்தனை உயர பார்க்கப் போகிறாரா என்று அசட்டுமா ஜன்னல் பக்கம் வந்து ஒரு நிமிஷம் பார் துக் கொண்டிருந்தேன். அக்கா, அந் சமயம் பார்த்துத்தானா அவரும் மே பார்க்கவேண்டும்? கொஞ்ச நேரத்திற்கு அம்மா மேலே வந்து பிரமாதமாய்த் திட் னாள். எனக்கு அப்போது ரொம்ப ரொம் கோபம் வந்துவிட்டது. இப்போது தெ கிறது, நான் செய்த விபரீதம். உனக்கு அவருக்கும் வயது வித்தியாசம் போதாதா என் ஜாதகத்தை அனுப்பும்படிக் கடித போட்டிருக்கிறார் அந்தப் புண்ணி புருஷர்!" என்றாள் சுந்தரி.

சாரதை மௌனமாய் எல்லாவற்றையு கேட்டாள். ஒன்றும் பேசத் தோன்றவ

தங்கையின் சௌந்தரியத்தை இமை கொட்டாமல் பார்த்தான். சற்று வெறிக்கக் கூடப் பார்த்ததாகச் சந்தரிக்குத் தோன்றிற்று. பிறகு நீண்ட பெருமூச்சுடன் ஜன்னலுக்கு வெளியே பார்த்தான்.

அவனுடைய ஆசையெல்லாம் பாழாயிற்று. என்றுமில்லாமல் குடிபுகுந்த நம்பிக்கையும் நிர்மூலமாயிற்று.

தங்கையைக் கட்டி அணைத்துக் கண்ணீர் உகுத்தான். யாருக்காக? தனக்காகவா, தங்கைக்காகவா?

★

“சித்தப்பா, அந்தப் பெண் சாரதையை நினைத்தால் என்னமோ மாதிரி இருக்கிறது” என்றான் ரங்கநாதன்.

“பின் ஏன் அவள் தங்கையின் ஜாதகத்தைக் கேட்டு எழுதச் சொன்னாயாம்?” என்றார் சிவராமகிருஷ்ணன்.

ரங்கநாதனால் பதில் சொல்ல முடியவில்லை. சந்தரியின் அழகில் அவன் ஈடுபட்டு, சித்தப்பாவை அம்மாதிரி எழுதச் செய்தான். பிறகு நிதானமாக யோசித்துப் பார்த்த போது இன்னதென்று சொல்ல முடியாத வேதனை வந்து அவனைக் கவ்விக்கொண்டது. சாரதையைப் பற்றி அவன் வெகுவாகப் பரிதாபப் பட்டான். அவள் முகம் அவனை வெருட்டிய போதிலும், அவள் பாட்டு அவனைச் சுழற்றிய போதிலும் அந்தத் துர்ப்பாக்கியவதியின் மனதிலும் எல்லாரையும்போல ஆசாபாசங்கள் உண்டு என்று தன்னையும் மீறி அறிந்தான். வெளி உருவத்தைக் கண்டு வெருண்டு ஓடும் இந்த உலகத்தில் அவளுக்கு என்ன சுகம் இருக்கக் கூடும்? வாழ்க்கையே கசந்து போய் விடாதா? அவள் மனம் எவ்வளவு புண்ணாகி இருக்க வேண்டும்! சாரதை, சாரதை! நீ என்னத்திற்காகப் பிறந்தாய்?

ரங்கநாதன் சாரதையைப் பற்றி நினைக்க நினைக்க மேலும் மேலும் சஞ்சல மடைந்தான். இந்தச் சஞ்சலத்தைப் போக்க இரண்டே வழிகள் தான் அவனுக்குத் தோன்றின. ஒன்று சாரதையை மறக்க வேண்டும்; இல்லா விட்டால் அவளை மணக்க வேண்டும். அவளை மணக்கக் கூடிய மகத்தான மனோதிடம் தன்னிடம் இல்லை என்று நிர்மாணித்துக் கொண்டான். ஆகவே, அவளைப் பற்றி மறக்க ஆரம்பித்தான்.

மூன்று மாதங்கள் சென்றன. ரங்கநாதன் சாரதையைப் பற்றின துன்ப நினைவுகளை அநேகமாய் மறந்து விட்டான். திடீரென்று எதிர்பாராதவிதமாய்ச் சாரதையின் தந்தை ராமையாவிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. சந்தரியின் ஜாதகத்தை அவர் அனுப்பி யிருந்தார். தாம் பார்த்த வரையில் நன்றாகப் பொருந்தி யிருப்பதாகவும், சம்மதமானால் மேற்கொண்டு ஏற்பாடுகள் செய்யலாமென்றும் எழுதியிருந்தார்.

சாரதையின் கதி என்ன?

இதுதான் ரங்கநாதன் மனதில் எழுந்த முதல் கேள்வி. அவளுக்குக் கலியாணம் நடக்கிறதிருக்கலாமென்று முடிவு செய்தான். அவனுக்கு என்றுமிலா சமாதானம் ஏற்பட்டது. சாரதையின் கணவனைக் கை யெடுத்து வணங்கலாமென்று எண்ணிக் கொண்டான்.

அந்தப் பெண்ணிடம் ஏன் அவனுக்கு அவ்வளவு ஆதரம்? அவனுக்கே புரியவில்லை.

## ‘பில்’ எதற்கு?



சிறைக் காவலாளி:—உன்னைத் தவறுதலாகச் சிறையில் வைத்து விட்டோம். நிஜக் குற்றவாளியைக் கண்டு பிடித்தாகி விட்டது. இனி நீ வெளியே போகலாம்.

காவலிலிருந்தவர்:—அது சரி; இதென்ன? ‘பில்’ எதற்குக் கொடுத்திருக்கிறீர்கள்?

காவலாளி:—நீ ஒரு மாத காலமாக இந்தச் சிறையில் இருந்த குடிக்கூலிக்கும் சாப்பாட்டுச் செலவுக்கும் பில் போட்டிருக்கிறோம்.

மறுபடியும் அதே கூடத்தில் ரங்கநாதனும் சிவராமகிருஷ்ணனும் உட்கார்ந்திருந்தனர்.

ரங்கநாதனுடைய கண்கள் ஒருமுறை முற்றத்தின் பக்கம் போய் மாடி ஜன்னலின் மீது ஓட்டம் பார்த்துவிட்டு மீண்டும் கூடத்திற்குத் திரும்பின!

சுந்தரி குனிந்த தலையுடன் நடந்து வந்து அவனுக்கு நமஸ்காரம் செய்தாள். தலை நிமிர்ந்து ரங்கநாதனை கெஞ்சும்படியாக ஒரு பார்வை பார்த்தாள்.

ராமையாவும் சிவராமகிருஷ்ணனும் ஏதேதோ பேசிக் கொண்டிருந்தார்கள். பேச்சுவாக்கில் சிவராமகிருஷ்ணன், "முதல் பெண்ணை எந்த இடத்தில் கொடுத்திருக்கிறீர்கள்?" என்று கேட்டார்.

ராமையா பதில் சொல்லவில்லை. விரக்தியாகச் சிரித்தார். பிறகு எதையோ சொல்ல யத்தனித்தார். அதற்குள் சுந்தரி பாட ஆரம்பித்தாள்.

ரங்கநாதனை ஏதோ ஒரு பயம் சூழ்ந்து கொண்டது. சாரதைக்கு என்ன நேர்ந்து விட்டது?

சுந்தரியின் பாட்டு முடிந்ததும், அவன் ராமையாவின் முகத்தைப் பார்த்தான். அவர் ஏதோ யோசனையில் ஆழ்ந்து கிடந்தார்.

எல்லோரும் மௌனமாய் இருந்தனர். ரங்கநாதனால் அந்த மௌனத்தைச் சகிக்க முடியவில்லை. அவன் இருதயம் எதற்காக அப்படி அடித்துக் கொள்கிறது?

கடைசியில் ராமையா பேச ஆரம்பித்தார். முற்றத்திலிருந்த குழாயைப் பார்த்துக் கொண்டே சொன்னார். "அவளுக்கு வரன் தேடி கால்கள் அலுத்துவிட்டோம். ஒன்றில்லை, இரண்டில்லை—ஐந்து வருஷங்கள். அவளுக்கு அகமுடையானாக வரப்போகிறவன் எந்த க்ஷேத்திரத்தில் இருக்கிறானோ தெரியவில்லை. நீங்கள் தவறாக அர்த்தம் செய்து கொள்ளக் கூடாது, உண்மையைச் சொல்லுகிறேன். நீங்கள் அவளைத் தள்ளி விட்டு அவள் தங்கையின் ஜாதகத்தைக் கேட்டதும் அவளுக்கே மனம் கசந்துபோய் விட்டது. 'கலியாணமே வேண்டாம்!' என்று தீர்மானமாய்ச் சொல்லிவிட்டாள். ஏதோ இந்தக் குழந்தைக்காவது காலா காலத்தில் கல்யாணம் பண்ணிப் பார்க்கலாமென்று அற்ப ஆசைப்படுகிறோம். பகவான் எப்படி நினைத்திருக்கிறானோ?" என்றார்.

ரங்கநாதனை இந்தப் பேச்சு சாட்டையால் அடிப்பதைப்போல் இருந்தது. அந்த நிமிஷம் அவன் சாரதையைத் தவிர எல்லாவற்றையும் மறந்தான். ஏன்,—சாரதையின் அம்மைத் தழும்புகள் நிறைந்த முகமும் வெருட்டும் கண்களும்கூட - மறைந்து போயின. உடைந்த மனதுடன் ஒரு பெண்! உலகத்தில் யாருடைய ஆதரவும் அவளுக்கில்லை. கோடி கோடி பேர் உள்ள இந்த மனுஷ சமூகத்தில் அவளுக்கு எவ்விதமான அந்தஸ்தும் கிடையாது. இனிமை, இன்பம் இவையெல்லாம் அவள் விஷயத்தில் அர்த்தமற்றுப் போயின. கோரமான சரீரத்தினுள்ளே அடைந்து கிடக்கும் அந்த ஆத்மாவின் குண சௌந்தரியத்தைத் திரும்பிப் பார்க்கக்கூட யாருக்கும் அக்கறையில்லை.

சாரதை! உன் புண்பட்ட உள்ளத்தால் என்னைச் சபிக்கிறாயா?

உணர்ச்சி வேகத்தில் ரங்கநாதன் ஒரு சங்கற்பம் செய்துகொண்டான்.

"சித்தப்பா, சாரதையை நான் கல்யாணம் செய்து கொள்கிறேன்" என்றான்.

சித்தப்பாவுக்கும் ராமையாவுக்கும் தூக்கி வாரிப் போட்டது.

"நிஜமாகவா?" என்று கேட்டார் சித்தப்பா.

"நிஜமாகத்தான். நிச்சயமாகத்தான்!"

★

சாரதையின் உள்ளம் ஆனந்தத்தில் திளைத்துக் கொண்டிருந்தது. தன் சோதனைக் காலம் முடிவடைந்து விட்டது என்றே எண்ணினாள்.

ஆனால், அந்தப் பேதைப் பெண்ணின் சோதனைக் காலம் அப்போதுதான் ஆரம்பித்திருந்தது. முன் நடந்தவையெல்லாம் வெறும் முன்னுரைப் படலந்தான்.

உலகத்தில் மிகச் சிறந்த, மகத்தான செயல்களெல்லாம் உணர்ச்சி வேகத்தில்தான் செய்யப்படுகின்றன. மனிதனின் மனம் என்றும் ஒரே மாதிரி இருப்பதில்லை. ஆர்வம் பொங்கி வழியும்போது அவனுக்கு இயற்கையாக அமையாத பிரமாதமான மனோ சக்தி அவனைச் செயலில் இறங்கும்படித் தூண்டுகிறது. அப்புறம் ஆற அமர உட்கார்ந்து யோசித்துப் பார்க்கும்போது தன்னால் எப்படி அவ்வளவு பிரமாதமான காரியம் செய்ய முடிந்தது என்று ஆச்சரியப்படுகிறான்.

ரங்கநாதன் செய்த காரியமும் அப்படித்தான். நிதானமாய் யோசித்துச் செய்திருந்தால் அவன் ஒருநாளும் சாரதையை மணக்க ஒப்பமாட்டான். தன் சக்திக்கு

மீறின விஷயம் அது என்று நினைத் திருப்பான்.

வலிய வேகம் வரவரக் குறைந்து வந்தது. மாற்ற முடியாதபடி சம்பவங்கள் நடந்து விட்டதை அறிந்தான். அவசரப் பட்டுப் போய் எதற்காக இப்படியெல்லாம் செய்தோம் என்று வருந்தினான்.

அவன் மனதில் ஏதோ திகில் புகுந்து கொண்டது. இந்தத் தாங்க முடியாத சுமையுடன் எத்தனை மேடு பள்ளங்கள் ஏறி இறங்க வேண்டுமோ?

நம்பிக்கை யற்றிருந்த அந் நிலையில் அவனுக்குச் சின்னஞ் சிறு காரியங்களெல்லாம் பிரம்மாண்டமாய்த் தோன்றின. சிறு குறைகளெல்லாம் பூதாகாரமாய்க் காட்சியளித்தன. எடுத்ததற்கெல்லாம் சாரதையின் பேரில் எரிந்து விழுந்தான்.

ஆகக் கூடி சாரதையின் மண வாழ்க்கை ஆனந்தமாக இல்லை. தன் கஷ்டங்களைப் பற்றிக்கூட அவள் வருந்தப்பட வில்லை. கணவனைத் தன்னால் திருப்தி செய்ய முடியவில்லை என்ற எண்ணம்தான் அவளை வாட்டியது. கடைசியில் என்னமாய் முடியப் போகிறதோ என்று பயந்தாள்.

ஏற்கனவே, பொறி கிளம்பிக் கொண்டிருக்க இடத்தில் நெருப்புப் பிடிக்க எத்தனை நேரமாகும்?

★

ரங்கநாதன் வைத்தியப் பரீட்சையில் தேறி விட்டான். அவன் சித்தப்பா தன் பணத்தில் ஒரு சின்ன வைத்திய சாலையமைத்துத் தானே அவனுக்குத் தொழில் முறைகள் கற்றுக் கொடுத்து வந்தார். அவர் மேற் பார்வையின் கீழ் ரங்கநாதன் தொழிலில் நல்ல தேர்ச்சி பெற்றான். வெ.ராமகிருஷ்ணன் பிறகு கொஞ்சம் கொஞ்சமாக விலகிக் கொண்டார்.

சாரதையை அவன் மணம் புரிந்து கொண்டதில் அவருக்கு முதலில் அவ்வளவு திருப்தி ஏற்பட வில்லை. போகப் போக அவளுடைய சலிப்பற்ற உழைப்பையும் சகிப்புத் தன்மையையும் பார்த்த பிறகு நல்ல அபிப்பிராயம் ஏற்பட்டது. கடைசியாக, "அவள் கிடைத்தற்கரிய ரத்தினம். ரங்கநாதன் கொடுத்து வைத்தவன்!" என்று சொல்லிக் கொண்டார்.

ரங்கநாதன் அவள் மேல் எரிந்து விழும் போதெல்லாம் அவர் வருத்தப் படுவார். அவனுக்குப் புத்தி சொல்லுவார்.

இதனாலெல்லாம் அவனுடைய குணத்தில் ஒரு மாறுதலும் ஏற்படவில்லை.

★

இரண்டு வருஷங்கள் ஓடி விட்டன.

ரங்கநாதனின் ஓயாத மனக் குறை, சாரதையின் தீராத துன்பம் — இவைகளை மீறிக் கொண்டு பிறந்திருந்தான் குழந்தை வேணுகோபாலன்.

பெண்மையின் லட்சியம் தாய்மை. ஒரு பெண் உலகிற்குச் செய்யும் புனிதமான தொண்டு; தீராத் துன்பத்தையும் அந்த மகத்துவத்தில் மறந்திருந்தாள் சாரதை.

அவள் முன்போல் விழுந்து விழுந்து ரங்கநாதனைத் திருப்தி செய்ய முனைவதில்லை. அவன் வசவுகளையும் அர்த்தமற்ற சீறல்களையும் நினைத்துக் கண்ணீர் விட அவளுக்கு அவகாசமிருப்பதில்லை. உதாசீனம் செய்யும் கணவனை விடக் கள்ளமற்ற அந்தக் குழந்தையைக் கவனிப்பதிலேயே அவள் கவனம் செலுத்தினாள். அதில் கிடைத்த ஆனந்தம் அவளுக்கல்லவா தெரியும்!

அன்று ரங்கநாதன் வைத்திய சாலையிலிருந்து சீக்கிரமே வந்து விட்டான். சாதாரணமாய் அவன் மாலை ஆறு மணி சுமாருக்குத்தான் வருவது வழக்கம். அன்று மூன்று மணிக்கே வந்து விட்டான். காரணம் இலேசான தலைவலிதான்.

வந்ததுடன், "சாரதை!" என்று கூப்பிட்டான். அவள் உள்ளே குழந்தைக்குப்



பால் புகட்டிக் கொண்டிருந்ததால் காதில் விழவில்லை. சற்றுப் பலமாக, "ஏ, சாரதா!" என்று கூப்பிட்டான்.

அவள் உள்ளேயிருந்து எட்டிப் பார்த்து விட்டு, "என்ன விசேஷம், இவ்வளவு சீக்கிரம் வந்து விட்டீர்கள்? கொஞ்சம் இருங்கள், குழந்தையைச் சமாதானம் செய்து விட்டு வருகிறேன்!" என்றாள்.

ரங்கநாதனுக்குக் கோபம் வந்துவிட்டது. "நேற்று முளைத்த பயல், என்னைவிட அவன் பெரிதாய்ப் போய் விட்டானே! வரவர உனக்கு அகம்பாவம் அதிகமாய்ப் போய்விட்டது!" என்று இரைந்தான்.

அவன் போட்ட கூச்சலில் குழந்தையின் அழுகை நின்றது.

சாரதை அவனைத் தலை நிமிர்ந்து பார்த்தாள். அவள் பார்வையில் யாதொரு விதமான சலனமுமில்லை. அவன் எதிர்பார்த்தபடி அவள் நடுங்கிப் போய் விடவில்லை. குழந்தையை எடுத்துக்கொண்டு அவனிடம் வந்து, "எதற்காக இப்படிக் கோபிக்கிறீர்கள்? குழந்தையைப் பற்றி ஏன் இப்படி வித்தியாசம் பாராட்டிப் பேசுகிறீர்கள்? அவன் உங்கள் குழந்தை என்பதைக்கூட மறந்து விட்டீர்களா?" என்றாள்.

ரங்கநாதனுக்கு இன்னும் கோபம் பொங்கிற்று. "நீ இத்தனை வாயாடி என்று எனக்குத் தெரியவில்லையே! அது ஒன்றுதான் குறைச்சலாக இருந்தது. நான் பைத்தியக்காரத்தனமாய்ச் செய்த காரியத்தின் பலன்!" என்று தலையில் அடித்துக் கொண்டான்.

## தகுந்த பதில்!



"ஏண்டா! இன்னமுமா உன் தங்கைக்கு லெட்டர் எழுதுகிறாய்? என்ன இவ்வளவு மெள்ள எழுதுகிறாயே?"
"என் தங்கைக்கு வேகமாகப் படிக்கத் தெரியாது; அதனால்தான்!"

சாரதை பேசாமல் சற்று நேரம் நின்றாள். பிறகு, "நான் தெரியாமல் என்னவோ பேசிவிட்டேன். என்னை மன்னித்து விடுங்கள். உங்களுக்கு நான் எப்படியிருந்தால் சந்தோஷமாக இருக்கும் என்று சொல்லுங்கள்; அப்படி இருக்கிறேன். நீங்கள் சந்தோஷமடைந்தால் எனக்கும் சந்தோஷமில்லையா?" என்று கம்மின குரலில் பேசினாள். பிறகு குழந்தையைக் கீழே விட்டுவிட்டு அவன் பாதங்களைத் தொட்டு நமஸ்கரித்தாள். ஒரு சூடான கண்ணீர்த் துளி அவன் புறங்காலின் மேல் விழுந்து ஓடிற்று.

அவன் தலை நிமிர்ந்து பார்த்தான். அவள் புடவைத் தலைப்பால் கண்களைத் துடைத்துக் கொண்டிருந்தாள். அவன் தொண்டை என்னவோ அடைத்தாற்போல உணர்ந்தான். நெஞ்சில் ஒரு பாரம் அழுத்தலாயிற்று. அவளைச் சமாதானப்படுத்த வேண்டுமென்று என்றுமில்லாத எண்ணம் உதித்தது. அதற்கு ஏனோ தைரியம் இல்லை.

சட்டென்று எழுந்து வெளியே சென்றான்.

கீழே கிடந்த குழந்தை அலறிற்று. சாரதை அவன் போன திக்கையே பார்த்துக் கொண்டு நின்றாள்.

★

ரங்கநாதன் வைத்தியசாலைக்கு வந்து தன் அறைக்குள் யாரையும் விடவேண்டாம் என்று ஏற்பாடு செய்துவிட்டு, சுழல் நாற்காலியில் உட்கார்ந்தான். சாரதையின் உருவம் இன்னும் அவன் மனதை விட்டு அகலவில்லை; என்ன காரணத்தினாலோ அவனால் அகற்றவும் முடியவில்லை.

மேஜை மேலிருந்த காலண்டரைப் பார்த்தான். அன்று மே மாதம் 23-ம் தேதி. அவனுக்குத் தூக்கிவாரிப் போட்டது.

இரண்டு வருஷங்களுக்கு முன், மே மாதம் 23-ம் தேதி யன்றுதான் அவன் சாரதையைக் கல்யாணம் செய்து கொள்வதாய் ராமையாவின் வீட்டில் நிச்சயம் செய்து கொண்டான். அன்று ராமையா சொன்னது இப்போது அவன் காதுகளில் நன்றாக ஒலித்தது. அந்தக் கூடம், தாழ்வாரம், முற்றம், முற்றத்திலிருந்த குழாய் எல்லாம் மனக் கண்முன் காட்சி யளித்தன.

சாரதையைப் பற்றித் தன் எண்ணங்கள், அவளுக்காகத் தான் செய்து கொண்ட

சங்கற்பம் — அடாடா! இப்படி யெல்லாம் மாறப் போகிறதென்று யார் கண்டார்கள்?

சாரதை! துரதிருஷ்டம் பிடித்த சாரதை! உன் சோதனை இன்னும் நீங்கவில்லை.

செய்து கொண்ட சங்கற்பத்தை எந்த விதத்தில் நிறைவேற்றினோம்? அவளுக்கு என்ன விதமான சந்தோஷம் கொடுத்திருக்கிறோம்? என்ன நிம்மதி யளித்திருக்கிறோம்? எடுத்த காரியத்தைச் செய்யும் தைரியம் இல்லாத குறையினால் அந்தப் பெண்ணை எவ்வளவு சோகச் செய்து விட்டோம்? அழகு, அழகு என்று உலகம் கண்மூடித் தனமாய்ப் போய் விட்டதென்று நினைத்தோமே! நாமும் அதே உலகத்தைச் சேர்ந்தவன்தான் என்று அப்போது மறந்தோம். நம்முடைய கண்மூடித்தனத்தினால் நமக்கும் சந்தோஷமில்லை, அவளுக்கும் சந்தோஷமில்லை.

உண்மையில் அவளிடம் என்ன குறையிருந்தது?

இல்லை, இல்லை; சாரதை, உன்னிடம் குறையிருக்கிறது என்று எண்ணினேனே, என்னிடமல்லவா குறையிருக்கிறது! உன்னுடன் இன்பமாக வாழமுடியாத எனக்கு எங்கிருந்து நிறைவு ஏற்படும்?

மகத்தானதொரு புரட்சி அவன் மனதில் உருவெடுத்தது. இனி ரங்கநாதன் இறந்த காலத்து மனிதனல்ல; நிகழ்காலத்து மனிதனுமல்ல; வருங்காலத்து மனிதன். மூடப்போக்கான எண்ணங்கள் அவன் மனதில் இதுவரை 'பனிச்'சென்று தோன்றி மறைந்த வண்ணமாயிருந்தன. இனி அவை மறைய மாட்டா. இரண்டு வருஷங்களாய் அவன் அனுபவித்த வேதனை வேள்வி அவனைப் புடம் போட்டு எடுத்தது.

அழகு என்று எங்கின அந்த எக்கம் ஒழிந்தது; அதற்குப் பதிலாக அழகு என்பதின் உண்மையை அவன் அறிந்தான். அந்த உண்மையின் மூலமாய் அவன் கண்ட சாரதை எல்லையற்ற சௌந்தரியம் பெற்றுத் தோன்றினாள்.

சாரதையைப் பற்றி என்ன என்ன அவன் முன் தான் ஒர் அணு என்று தோன்றியது. அவளிடம் யாதொரு குறையும் தோன்றவில்லை. அவளைப் போல நிறைந்த குணங்களோடு கூடியவளைப் பெறத் தான் எத்தனை பாக்கியம் செய்திருக்க வேண்டுமோ என்று தோன்றிற்று.

ரங்கநாதன் எழுந்து வீட்டை நோக்கி நடந்தான். வீடு அவனுக்குத் தேவாலயமாய்த் தோன்றியது. நெஞ்சில் மட்டும் ஒரு கூச்சம் இருந்து கொண்டிருந்தது.

சாரதை குழந்தையை வைத்துக் கொண்டு கொஞ்சிக் கொண்டிருந்தாள். சற்று முன் நடந்த சம்பவத்தை மறப்பதற்காகவே அவள் அவ்வாறு செய்து கொண்டிருந்தாள்.

வந்ததும் வாராததுமாக ரங்கநாதன், "சாரதை, கொஞ்சம் உள்ளே வா!" என்றான். சாரதை ஒன்றும் புரியாமல் அவனைப் பின் தொடர்ந்தாள்.

ரங்கநாதன் அவளை நாற்காலியில் உட்கார வைத்தான். பிரமை பிடித்தவளாய் அவள் உட்கார்ந்தாள். இதெல்லாம் அவள் முன் பின் கண்டறியாத உபசாரமாயிற்றே!

அவன் சொன்னான்: "சாரதை, உன்னை ரொம்பவும் துன்பத்திற் காளாக்கி விட்டேன். இன்றுதான் என் கண்கள் திறந்தன. இன்றுதான் உன்னைக் கண்டேன். இன்றுதான் என்னையும் கண்டு கொண்டேன். ஏதோ பிரமாதமாய் உனக்கு ஆதரவளிப்பதாகச் சொல்லிக் கொண்டேன். சாரதை, என்னுடைய ஆதரவு உனக்கு ஒரு பொருட்டல்ல; இப்போது—இன்றிலிருந்து, உன் ஆதரவு எனக்கு வேண்டும். தருவாயா? சொல்லேன், என் கண்ணே!"

சாரதை எங்கேயோ பறப்பதைப் போல் உணர்ந்தாள்.

அவள் கையிலிருந்த குழந்தை எதையோ நினைத்துச் சிரித்தது.

அன்றுதான் அவர்களுடைய உண்மையான இல்லறம் ஆரம்பித்தது.



# காலக்ஷேபம்

### காத்திருக்க வேண்டியதுதான்!

கணவன்:—என்ன, இன்னும் டிபன் ஆகவில்லையா? சரி, நான் ஓட்டலுக்குப் போகிறேன்.

மனைவி:—இன்னும் பத்து நிமிஷம் காத்துக் கொண்டிருக்கக் கூடாதா?

கணவன்:—ஏன், அதற்குள் ஆகிவிடுமா?

மனைவி:— இல்லை; நானும் உங்களுடன் வந்து விடுவேன்! —எம். வி.



### போவதில் திருப்தி!

புதிதாக வந்த மானேஜர்:—ராமு! இந்த ஆபீஸ் குமாஸ்தாக்கள் என்னை மதிப்பதே இல்லை. இதற்கு முந்தி நான் இருந்த ஆபீஸிலிருந்து மாற்றலாகிப் போன குமாஸ்தாக்கள் எனக்கு ஒரு வெள்ளிப் பொடி டப்பியைக் கொடுத்தார்கள்.........

குமாஸ்தா:—இதென்ன பிரமாதம்? நீங்கள் இந்த க்ஷணமே இங்கிருந்து போவதாய் இருந்தால், நம் குமாஸ்தாக்கள் ஒரு பெரிய வெள்ளி அண்டாவையே கொடுக்கக் காத்திருக்கிறார்கள்! —ஆர். வெங்கடராமன்.



### விடாக் கண்டர்!

கனவான்:—என்ன ஸார்! கச்சேரி டிக்கட் மூன்று ரூபாய்தான் என்கிறீர்கள். அதற்குப் போக வர டாக்ஸி செலவு நாலு ரூபாயல்லவா ஆகிறது?

டிக்கட் விற்பவர்:—அதனால் என்ன? பேசாமல் ஐந்து ரூபாய் டிக்கட் ஒன்று வாங்கி விடுங்களேன்! அப்போது டாக்ஸி செலவு அதை விட ஒரு ரூபாய் குறைவாக ஆகும்!

—பி. ராமமூர்த்தி.

### சரியான பதில்

தையற்காரன்:—ஏன்டா முட்டாள்! புதுத் துணியை அதற்குள்ளே கிழித்து விட்டாயே?

பையன்:—என் அப்பா, நான் இந்தப் புதுத்துணியைக் கிழிச்சுட்டேன்னு இப்படி அடிக்கிறீயே! நீ எவ்வளவு புதுத் துணியைக் கடையில் கிழிக்கிறே?

—வெ. சா. சுப்பய்யச் செட்டியார்.



### சோம்பேறி!

எஜமான் (வேலைக்காரனிடம்):—டேய்! பார்த்தாயா! அவன் ஒரு நடையில் இரண்டு பலகை கொண்டு போகிறான். நீயும் ஏன் கொண்டு போகக்கூடாது?

வேலைக்காரன்:—அவனுக்கு இரண்டு நடை நடப்பதற்குச் சோம்பலுங்க. அதனால்தான் ஒரே நடையில் கொண்டு போகிறான்.

—எஸ். ஆர். மணி.



### ஏமாற்றம்

டாக்டர்:—இன்னிக்குப் பெரிய கேஸாக இரண்டு கேஸ் என் கையை விட்டுப் போகிறது......நாசம்!

நண்பர்:—என்ன டாக்டர் ஸார்! செத்துப் போயிட்டானாக்கும்...... அடடா!

டாக்டர்:—இல்லை ஸார், இல்லை! சௌக்கியமாகி ஊருக்குத் திரும்புகிறார்கள்.

—எஸ். ருக்மணி.



### எப்படி பதில்?

ஒருவர்:—ஸார்! நீங்கள் என்னை தேடிக் அழைத்திருந்தும், தாங்கள் நடத்திய விருந்துக்கு வரமுடியாமல் போய்விட்டது. மன்னிக்க வேண்டும்.

மற்றவர்:—ஓஹோ! நீங்கள் வரவில்லையா? சரிதான்; நான் கவனிக்கவில்லை.

—பி. கே. தெக்ஷணாமூர்த்தி.



சங்கீத வித்வான் (கல்யாணக் கச்சேரியில்):—என்ன! மங்களம் பாடிவிட வேண்டியதுதானே?

# ஆட்டக்காரர் விரும்புவது

கணநேரத்தில் கையும் கண்ணும் குறிதவறாமல் இருக்கவும், பூராப் பொருத்தமான வலிவுடனிருக்கவும் வேண்டிய சமயங்களிலெல்லாம் முதலில் விரும்பப்படுவது டீ தான்.

ஒவ்வொரு விளையாட்டிலும் தலைசிறந்து நிற்போர் இவ்வுண்மையை அறிந்து டீ அருந்துவதையே பிரதானமாகக் கொண்டது தற்செயலாக ஏற்பட்டதல்ல. முதலாவதாக தாகத்தைப்பூரணமாக தணிக்கவல்லது டீ. மேலும் குறித்த வேலையில் ஒரு முகமாக கவனம் செலுத்த உதவுவதால் ஊக்கத்தை அதிகரிக்கிறது. கடைசியாக எக்கெடுதியும் செய்யாதது.



"கடினமான ஆட்டத்துக்குப் பிறகு முதல்தரமானது"
ஹஸாரே

"கிரிக்கெட் ஆட்டத்தில் புகழ்பெற விரும்புவோர் அதிகமாக டீ அருந்தவேண்டும்"
முஷ்டக் அலி



"ஆடுவதற்கு முன்பும், ஆடிய பிறகும் ஒருகப் டீ அருந்துவதால் நன்மையுண்டு"
ஸர்தார் ஹர்பாயல் ஸிங்



"டீயைத்தவிர வேறு எந்த பானத்தையும் சிபாரிசு செய்ய முடியவில்லை"
தாஜ் முகமத்

"என் கட்சியைப் போலவே டீயையும் விரும்புகிறேன்"
அனில் டே.



"ஆட்டங்களுக்கிடையில் ஒரு கப் டீ அருந்தினால் எத்தகைய புத்துணர்ச்சி"
கேஸல் முகமத்

"விறுவிறுப்பான டென்னிஸ் விளையாட்டில் டீ தான் எனக்குப் பிரியமான பானம்"
இப்திகார் அகமது






"தண்ணீரை விட்டு வந்தவுடன் ஒரு கப் டீ எப்பொழுதும் அருந்துகிறேன்"
பி. கே. கோஷ்



"பலம் குறையாமல் இருக்க உதவும் சிறந்த பானம், எந்த ஆட்டக்காரருக்கும் இன்றியமையாதது"
ஜானகி ராம்



இந்தியன் டீ மார்க்கெட் எக்ஸ்பான்ஷன் போர்டாரால் வெளியிடப்பட்டது
IK 259 ATM

# சாத்தூர் சுப்பிரமணியம்

இசைத்தேனீ

இக்காலம், பெரும் மேடைப் புகழ் அடைந்திலங்கும் கலைவாணர்கள் இவரோடு மாத்திரம் நமது சங்கீதத்தின் உயரிய தன்மை நின்று விடவில்லை. வாழையடி வாழையாய் அதைப் போஷித்துச் சிறப்பிக்கச் சில இளம் வித்வான்களும் முன்னணியில் நிற்கிறார்கள் என்பதை நாம் மறக்கக் கூடாது. அவர்களில் ஒருவர் சாத்தூர் ஏ. ஜி. சுப்பிரமணியம். ராஜா அண்ணாமலை சங்கீதக் கலாசாலையில் தேர்ச்சி பெற்று, சங்கீத பூஷணமாய் மேடைப் பிராபல்ய மடைந்து வரும் இவரில் ஒருவர். மிருதுவான சாரீரம் படைத்தவர். ஞானச் சிறப்புக் கொண்டவர். கற்பனையால் கலையை அலங்கரிக்கும் இனத்தைச் சேர்ந்தவர்.

சென்ற ஞாயிற்றுக் கிழமை புரசைவாக்கம் சங்கீத சபையில் நடைபெற்ற அவரது கச்சேரி குறிப்பிடத்தக்கது. முத்தையாச் செட்டியார் பெண் பள்ளிக்கூடத்தின் முன் தோட்டத்தில், அழகியதோர் சிறு பந்தலில், ரஸிகர்கள் சௌகரியமாயும், காற்றோட்டமாயும் உட்கார்ந்து சங்கீதத்தை அனுபவிப்பதற்கான வசதிகளுக்கேற்ப, கச்சேரியும் சுகமாய் அமைந்தது. அவர் கானத்தில் அன்று நாஸூக்கே பிரதானமா யிருந்தது. அவருக்கு இயற்கையான கற்பனை வேலைப்பாடுகளைக்கூடச் சிறிது குறைத்துக் கொண்டு, சுருதி சுத்தத்தையும் சுபாவத்தையுமே அதிகம் கவனிக்க வேண்டுமென்று பிளான் போட்டுக் கொண்டது போல் தோன்றியது.

'ஸாரஸீருஹா' என்ற நாட்டைக் கிருதியுடன் ஜமாவாய் ஆரம்பித்து சுமார் நான்கு மணி நேரம் சளையாது பாடினார். கிருதிகளுக்கு முன் ராக ஆலாபனைகளை இல்லாமலோ மிகச் சுருக்கமாகவோ செய்வதும், ...ர்த்தச் சிலவற்றிலும் பிர்க்காவைக் கொட்டி உருத் தெரியாது ஆக்குவதும், உருப்படிகளை அவசரமாய் மழுப்பி விட்டு, மிகைப்பட்ட ஸ்வரங்களால் சிலாக்க வைப்பதும், சில வட்டாரங்களில் பெரிய சங்கீதமாகக் கருதப்படுகிறது. சாத்தூர் சுப்பிரமணியம் அந்த இனத்தைச் சேராது, பல ராகங்களைப் போதியவாறு விரிவாயும், நிதானமாயும், தெளிவான அழகு வடிவங்களாகக் கையாண்டார். அவர் அன்று எடுத்துக் கொண்ட ராகங்களில் ஹிம் மோத்திர மத்யமத்துக்கே முதல் ஸ்தானம் கொடுக்க வேண்டும். அதன் மேல் ஸ்தாயி சஞ்சாரங்களில் அரிய வனப்புடன் இழைத்த கற்பனைப் பிடிகளை எளிமையாயும் கொடுக்கலா மென்பதை நிரூபித்தார். 'உன்னையல்லால்' என்ற கிருதியில் விழுந்த நிரவல் ஸ்வரப்ரஸ்தாரங்கள், பாவப் பொலிவுடன் உருக்கங் கொடுத்துக் கேட்போரின் கரகோஷத்தைப் பெற்றன. உதயரவி சந்திரிகாவும், கல்யாணியும் வெகு தரமா யிருந்தன. மோஹனம், பைரவி, காம்போதி ராகங்களும் சுகமா யிருந்தன. கல்யாணியில் 'ஆனந்த பரமானந்த முகுந்தா கோவிந்தா' என்ற பல்லவியைக் கால் இடத்தில் எடுத்து அவ் வெடுப்பை சொட்டான வேலைப்பாடுகளிலும் பிறழாமல் கச்சிதமாய் நிர்வகித்தது, அவரது லயப்பிடிப்பை நன்கு விளக்கியது. பல்லவி ஸ்வரத்தை ராகமாலிகையாய் அமைத்தது சோர்த்தியா யிருந்தது. உருப்படிகள் எல்லாம் ஒழுங்கா யிருந்தன. இக்காலம் பெயர் பெற்ற பாணி வகை எதையும் பின்பற்றியதாகத் தென்படவில்லை. தனியான பாணி ஒன்றை உருவாக்கிக் கொள்ளப் போதிய அம்சங்க ளிருக்கின்றன.

ஆனால் சுருதி சுத்தத்துக்கும் மெருகுக்குமாக, சுருதியைச் சற்றுக் குறைத்து வைத்துக் கொண்டார் போலும். அதன் பயனாக, சாரீரத்தின் காத்திரமும் சிறிது குறைவாகவே கேட்டது. மேல் ஸ்தாயியில் தைவதம்வரை அனாயாசமாயும் தெளிவாயும் கேட்ட குரல், கீழ் ஸ்தாயிகளில் அவ்வளவாகக் கேட்கவில்லை யென்பது 'ஸ்ரீ சுப்ரமணியாய நமஸ்தே' கிருதியில் தெரிய வந்தது. இவை விலக்காக, மொத்தத்தில் கச்சேரி ஆரம்ப முதல் கடைசிவரை இனிய விருந்தாகவே யமைந்தது.

ஸ்ரீ கோவிந்தசாமி நாயக்கர் பிடில் வாத்யத்தை நல்ல திறமையுடன் வெகு நாஸூக்காய்க் கையாளுகிறவர். அவரும், மிருதங்கம் வாசித்த திருக்கோகர்ணம் ஸ்ரீ மீனாக்ஷி சுந்தரமய்யரும் அன்றையக் கச்சேரியை அழகு படப் போஷித்தார்கள்.

# சிநேகத்துக்கு ஆரம்பம்

இன்று சிற்றுண்டிச்சாலைகளில் கூட்டமதிகம். நீங்கள் தனிமையில் அங்குபோனால், அறிமுகமில்லாதவருடன் உட்கார்ந்து சாப்பிட நேரிடலாம். அன்னியர் ஒருவர் முன் உட்கார்ந்து சாப்பிடுவது ரசிக்கக் கூடியதல்ல. ஆனால் சாப்பாட்டை எதிர்பார்த்து உட்கார்ந்திருக்கையில், அவர் தனது டப்பாவைத் திறந்து வர்ஜீனியா நெ. 10 சிகரெட் ஒன்றை உங்களுக்கு அளித்தாலோ? அடுத்த கணமே நீங்கள் இருவரும் நண்பர்களாகி விடுகிறீர்கள். சாப்பாட்டையும் அனுபவித்து சாப்பிடுகிறீர்கள்.




## நம்பர் டென்
## வர்ஜீனியா

சிறந்த சிகரெட்

ஜேம்ஸ் கார்ல்டன் லிமிடெட், லண்டன்

NTK (3) TM

# ஏழை யார்?

வி. ஆர். ராமஸ்வாமி

"உனக்கு எப்பொழுது கல்யாணம் நடந்தது?" என்று நான் கோவிந்தராஜனைக் கேட்டேன். அவன் "அது ஒரு கதை" என்று சொல்லலானான்:

"நானும் சர்மாவும் கல்கத்தாவில் ஓர் ஆங்கில தினசரிப் பத்திரிகையில் வேலை செய்து வந்தோம். அவனுடன் எனக்கு முதல் முதலிற் பழக்க மேற்பட்டது, அவன் சென்னையில் ஹிந்தி வாத்தியாரா யிருந்த பொழுது. கல்கத்தாவில் பத்திரிகை ஆரம்பமாகும் விளம்பரத்தைச் சென்னையில் பிரசுரிக்கப்படும் பத்திரிகைகளில் படித்து நாமிருவரும் விளையாட்டாக உதவி ஆசிரியர்கள் வேலைக்காக எழுதிப் போட்டோம். எதிர்பாராத விதமாய் உடனே வேலைக்கு வந்து சேரும்படி இருவருக்கும் உத்தரவு வந்தது. கல்யாணமாகாத நம்மைப் போன்ற நடி பிரம்மசாரிகளுக்கு எங்கே வேலை கிடைத்தாலென்ன? உடனே புறப்பட்டோம்.

"பத்து வருஷத்திற்கு முன் நடந்த சமாசாரம். நானும் சர்மாவும், முதல் தேதி வந்த சம்பளத்தை ஜேபியில் போட்டுக் கொண்டு, ஈடன் தோட்டத்தில் உலாவி விட்டு, ஒரு பலகாரக் கடையில் சிற்றுண்டி சாப்பிட்டு விட்டு, 'மியூ தியேட்ட'ருக்கு வந்து சேர்ந்தோம். படத்தைப் பார்த்துத் திரும்புகையில், மணி பன்னிரண்டிருக்கும். சர்மா கல்கத்தாவில் பவானிபுரத்தில் வசித்து வந்தான். நான் காளிகட்டத்தில் வசித்து வந்தேன். சித்தரிபுரம் வரையில் கால் நடையாகப் போகத் தீர்மானித்தேன். உஷ்ணம் மிகும் தாரிட்ட பாகத்தை விட்டு, பாதை ஓரத்தில் சாலை மரங்கள் நிழலில் நடந்து சென்றேன். சித்தரிபுரம் வந்ததும் யாரோ ஒரு தடியன் கையில் ஒரு மரக் கட்டையைப் பிடித்துக் கொண்டு என்னைப் பின் தொடருவதாகத் தெரிந்தது. அன்று வாங்கின சம்பளம் என் சட்டைப் பையில் இருப்பதை நினைத்து, எனக்குப் பயம் ஏற்பட்டது. பட்டாணித் தடியன் என்னை விடாமல் தொடரத் தொடர பயமும் அதிகரித்துக் கொண்டே வந்தது. அவனுக்கு எப்படி டிமிக்கி கொடுப்பதென்று யோசித்துக் கொண்டே சென்றேன். நல்லவேளை, அவன் வெற்றிலைப் பாக்குக் கடை ஒன்றில் பீடா வாங்கத் தாமதித்தான். இதுதான் நல்ல சமயமென்று — அப்பொழுது பெரிய பாதை காளிக்கட்டத்திற்குப் பிரியு மிடத்திற்கு வந்திருந்தோம் — ஒரு சிறிய வீட்டில் ஜன்னல் வழியாய் வெளிச்சம் வருவதைக் கண்டு, படியேறி அந்தக் கதவைத் தட்டினேன். கதவு தட்டினவுடன் சிறிது விலகிற்று. சாத்தப்படவில்லையென்று அறிந்து கதவைத் தள்ளித் தன் வீட்டிற்குள் நுழைகிறவன் போல் வாசற்படியில் தொங்கின படுதாவை விலக்கி உள்ளே தைரியமாய் நுழைந்தேன். படுதாவில் கட்டி யிருந்த சிறு மணிகளின் ஓசையைக் கேட்டு அறையில் சாய்ந்திருந்த இருபத்திரண்டு வயதுப் பெண் — பெண்ணல்ல, அப்ஸரஸ் என்றே சொல்ல வேண்டும் — எழுந்து நின்றாள்.

"அவளைக் கண்டவுடன், சிறந்த அழகுள்ள ஸ்திரீயைக் கண்டால் உண்டாகும் பயமும் பக்தியும் எனக்கு உண்டாயிற்று. அவள் ஒன்றும் கேட்காமல் மௌனமாக என்னைப் பார்ப்பதைக் கண்டு நான் எவ்வாறு அந்த வீட்டில் நுழையலாயிற்று என்று வெட்கத்துடன் சொன்னேன். அவள் லேசாகச் சிரித்து, 'அந்தத் தடியனை விட என்னைக் கண்டு அதிகமாகப் பயப்படுகிறது போல் காண்கிறதே' என்று தமிழில் சொன்னாள். அவள் தமிழ் பேசுவதைக் கண்டு அடைந்த வியப்பும் மகிழ்ச்சியும் ஒரு புறம், அவள் கண்களில் நீர்த்துளிகளைக் கண்டு பயம் மற்றொரு புறம் அடைந்தேன். என்னுடைய விஷயத்தைக்கூட மறந்து காரணம் விசாரிக்கத் துணிந்தேன். அவள் 'நீங்களும் தமிழர், திக்கற்ற எனக்கு ஒரு துணையை அனுப்ப பகவானிடம் முறையிடும் பொழுது நீர் வந்து சேர்ந்தீர்' என்று சொன்னாள். இதைச் சொல்லிவிட்டு 'நேரமாய் விட்டது. பட்டாணி போய்விட்டிருப்பான். உங்கள் மனைவி மக்கள் உமக்காக வீட்டில் காத்திருப்பார்கள்' என்று பரிதாபமாய்ச் சொன்னாள். நான், 'எனக்குக் கலியாணமாக வில்லை. நீங்கள் தனியே இங்கே என்ன செய்கிறீர்கள்?' என்று கேட்டு விட்டேன். அவள்,

'நான் சங்கீதம் கற்றுத்தருகிறேன்' என்றாள். நான் போய் வருகிறேன் என்று சொல்லி வெளியே போகத் தயாரானேன். அவள், 'வருகிறேன் என்று சொன்ன வார்த்தையை மறக்க வேண்டாம்' என்றாள்.

"இப்படி இந்திராவுடன் ஆரம்பித்த பரிச்சயம், பிறகு ஆழமாக மாறிற்று. அவளுடைய சங்கீதத்தைக் கேட்டுப் பரவசமடைந்து அவளிடம் பாட்டும் வீணையும் கற்க சிஷ்யனாக அமர்ந்தேன். நமது நட்பு தூய்மையானதாகவே இருந்தது. அவளாவது நானாவது பேச்சிலோ, நடத்தையிலோ, எண்ணத்திலோ உடலைப் பற்றிய காமத்தில் செலுத்த முயலவில்லை.



"இந்த விவகாரங்களைக் கண்டு சர்மா பயந்து நம்மைப் பிரிக்கச் செய்த முயற்சிகள், நம்மை அதிகமாகச் சேர்க்கவே பயன்பட்டன. என்னைப் பார்த்து, 'நீ என் கொஞ்ச நாட்களாய்ப் பலகாரம் சாப்பிடுவது, உலாவப் போவது, படம் பார்க்கப் போவது, அரட்டை அடிப்பது இவற்றையெல்லாம் நிறுத்திவிட்டாய்? எனக்குத் தெரிந்த ஒருவருடைய பெண்ணிற்குக் கல்யாணம் செய்ய ஏற்பாடு செய்யும்படி உன் அப்பாவுக்குக் கடிதம் எழுதியிருக்கிறேன். நானும் கல்யாணம் செய்துகொள்ள நினைத்திருக்கிறேன். நாம் இருவரும் சேர்ந்தாற்போல் கல்யாணம் செய்து கொள்வது சௌகரியமாயிருக்கும் அல்லவா?' என்றான். அவன் வேடிக்கையாகச் சொன்னது உண்மையென்பது எனக்குச் சி நாட்களுக்குப் பின் தகப்பனாரிடமிருந் வந்த கடிதத்தால் தெரிய வந்தது.

கோவிந்தராஜனுக்கு ஆசீர்வாதம். சர்ம ின் மூலம் கோபாலசாமி ஐயங்கார் பெண் லலிதாவை உனக்குக் கொடுத்து மண செய்ய நிச்சயமாயிருக்கிறது. முகூர்த்த கூட நிச்சயமாய் விட்டது. பெண்ணின் போட்டோவை அனுப்பியிருக்கிறேன்.

இப்படிக்கு,

அப்பா

"நான் போட்டோவைப் பார்த்துப் பி மித்து விட்டேன். அது இந்திராவின் போட்டோமாதிரியே இருந்தது. சர்மாவிட சென்று 'இவள் யார்?' என்று கேட்டேன். அதற்கு அவன் சிரித்துக்கொண்டு 'அ அவள்தான். லலிதாதான். வேறு யார்? என்று சொல்லிச் சிரித்தான். நான் இந்திர டன் எனக்கு ஏற்பட்ட ஆழத்தை சொல்லி, 'சர்மா! இது இந்திராவின் போட்டோ மாதிரி இருக்கிறது' என்றேன். அவன் என்னைக் கேலி செய்து 'இந் நற்குலப் பெண்ணுக்கும் சங்கீதம் சொ லித் தருகிறேன் என்று சொல்லித் தன் வலையில் உன்னைச் சிக்க வைத்திருக்கு ஒரு கெட்டுப்போன பெண்ணுக்கும் என்ன சம்பந்தமிருக்கக் கூடும்?' என்று கேட் டான். நான் அவனிடம் கோபித்துக் கொண்டு, 'நீ பார்த்த பெண்ணை நான் கல்யாணம் செய்து கொள்ளப் போவ தில்லை' என்று சொல்லிப் போய்விட்டேன். 'எனக்கு நீ ஒரே பிள்ளை. என்னை என் கடைசி நாட்களில் துக்கத்தில் ஆழ்த் விரும்புகிறாயா?' என்று தகப்பனாரிட மிருந்து உருக்கமான கடிதமொன்று வ தது. சர்மா அதை இந்திராவிடம் சொல் விட்டு அவளை என்னை உதாசீனமாக நடத்த செய்து விட்டான். நான் இந்திராவிட போய்த் தைரியம் செய்துகொண்டு, 'நீ சுத் மான வாழ்க்கையை நடத்தி வருகிறாயா?' என்று சர்மா கிளப்பின சந்தேகத்தை சொல்லமாட்டாமல் சொன்னேன். இந்திர 'என்னைப் பார்த்தால் உங்களுக்கு அப்படி தோன்றுகிறதா?' என்று கேட்டாள். நான் மௌனமாயிருந்ததைக் கண்டு அவள் 'உங்கள் கல்யாணத்துக்கு நான் தடை செய்ய விரும்பவில்லை. நீங்கள் உங்கள் நண்பன் சர்மா பார்த்த பெண்ணைக் கல்யா ணம் செய்துகொள்ளுங்கள். நான் திக்கற் ஏழைப் பெண். மேலும் வேசி' என்று சொல்லி என்னை அனுப்பிவிட்டாள். அவள் அப்படிச் செய்தது என் தகப்பனார் படும்

துக்கத்தைப் பற்றிச் சர்மா அவளிடம் சொல்லி அவளைத் தூண்டியதினால் என்று பின்னர் தெரியவந்தது.

"கடைசியில் நான் தகப்பனாருக்கு அவர் செய்த ஏற்பாட்டிற்கு ஒப்புக் கொண்டதாக மனச்சாட்சிக்கு விரோதமாகக் கடிதம் எழுதி அனுப்பினேன். காலத்தைக் கருதி, இந்திராதான் என்னை அலட்சியம் செய்கிறாளே, வீணாக என் தகப்பனாருக்கு மனஸ்தாபத்தை உண்டாக்க வேண்டும் என்று என் குற்றமுள்ள நெஞ்சிற்குச் சமாதானம் சொல்லிக் கொண்டேன்.

தகப்பனாரிடமிருந்து, 'நீ செய்தது எனக்குச் சந்தோஷத்தைத் தருகிறது. கோபாலசாமி அய்யங்கார் நல்ல சொத்துடைத்தவர். முன் ஒரு பெண் இருந்தது. அது சிறு வயதில் காணாமற் போய்விட்டது. உடம்பில் இருந்த நகைகளுக்காக யாரோ திருடர்கள் கொன்று போட்டார்களாம். அவருக்கு லலிதாவைத் தவிர இப்போது வேறு சந்ததி கிடையாது. பெண்ணிற்குச் சொத்தும் அழகும் இருக்கையில் யாரையோ நினைத்து வாழ்க்கையைக் கெடுத்துக் கொள்ளாமலிருந்ததைப் பற்றிச் சந்தோஷம்' என்று கடிதம் வந்தது.

"இரண்டு வாரம் கழித்துப் பத்திரிகையில் என்னுடைய கலியாணம் நடக்கப் போவதாக ஒரு விளம்பரம் என் பத்திரிகையிலும் வெளிவந்தது. சாயந்திரம் சர்மா, 'உன் இந்திரா ஆஸ்பத்திரியில் இறக்கும் தறுவாயிலிருப்பதாக சமாசாரம். விஷம் சாப்பிட்டு விட்டதாகச் சொல்லுகிறார்கள்' என்றான்.

"உடனே ஆஸ்பத்திரிக்கு ஓடினேன். ஆஸ்பத்திரியில் குடியிருக்கும் டாக்டர், 'இந்திரா உங்களுக்கு என்ன ஆக வேண்டும்?' என்று கேட்டுப் பக்கத்திலிருப்பவர்களைப் பார்த்துக் கண் சிமிட்டினார். நான் அவருடைய கேலியை லக்ஷியம் செய்யாமல் 'அவள் என் சிநேகிதி. பார்க்க விரும்புகிறேன்' என்றேன். அவருடைய அனுமதி பெற்று இந்திரா படுத்திருக்குமிடம் சிசுருஷை பணியாளச்சியுடன் சென்றேன். அப்போது இந்திரா என்னைப் பார்த்த பார்வையானது என்னை வேறு உலகத்துக்குத் தூக்கிச் சென்றது. 'ஏன் விஷம் சாப்பிட்டாய்?' என்று கேட்டேன். நாங்கள் அன்னியோன்னியமாய்ப் பேச விரும்புவதைக் கண்டு பணிவிடையம்மாள் விலகிச் சென்றாள்.

"இந்திரா, 'நீங்கள் என்னைக் காண வருவதை நிறுத்திவிட்டவுடன் எனக்கு வாழ்க்கையில் வெறுப்பு ஏற்பட்டுவிட்டது. உங்கள் கல்யாண விளம்பரத்தைப் படித்ததும் விஷம் சாப்பிட்டு விட்டேன்' என்றாள்.

'நான் குற்றாலத்தில் ஓர் பஞ்சம சாதியைச் சேர்ந்த ஏழை எலிமெண்டரி பாடசாலை உபாத்தியாயரின் பெண். என் தகப்பனார் இறந்தவுடன் என் தமையன் கந்தசாமி கிறிஸ்தவனாகிச் சில பாதிரிமார்களுடன் கல்கத்தாவிற்குச் சென்றுவிட்டான். நான் ஒரு கனவானைப் பார்த்து, அவருக்குட்பட்ட ஒரு பெண் பள்ளிக்கூடத்தில் உபாத்திச்சியாக அமர்ந்தேன். அந்தக் கனவானுடைய நடத்தையைக் கண்டு பயந்து என் மாணவி ஒருத்தியுடைய தமக்கையுடன் — அவளும் கிறிஸ்தவ மதத்தைத் தழுவித் தன் அந்தஸ்தை உயர்த்திக் கல்கத்தாவில் ஒரு கிறிஸ்தவக் கனவானின் மகனைக் கலியாணம் செய்து கொண்டவள் — அவளுடன் இங்கே வந்தேன். பாட்டுச்சொல்லிக் கொடுக்கும் தொழிலை ஏற்றுக் கொண்டேன். இங்கேயும் என் கஷ்டங்கள் தீரவில்லை. திக்கற்ற பெண்களைக் கண்டால் எல்லாரும் வேட்டையாட ஆரம்பிக்கிறார்கள். எவ்வளவு சுத்தமாக இருந்தாலும் நடத்தையைச் சந்தேகிக்கிறார்கள். நான் உங்கள்மேல் காதல் கொண்டது முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்பட்டதுபோலாயிற்று. சர்மா என்னை



உங்கள் வாழ்க்கையைக் கெடுக்க வேண்டா மென்று வேண்டிக் கொண்டார். நான் உங்கள் நன்மைக்காக என்மேலேற்பட்ட சந்தேகத்தைத் தீர்க்க முயலவில்லை' என்று சொல்லி முடித்தாள்.

"அவள் கண்களிலிருந்து நீர் பெருக ஆரம்பித்தது. 'நான்தான் ஏழை. நீ குணமென்ற செல்வம் படைத்தவள்' என்று சொல்லி அவள் கண்ணீரைத் துடைத்தேன். அந்தச் சமயத்தில் வீட்டுப் பரீக்ஷை செய்த டாக்டர் அங்கே வந்தார். என் சம்பாஷணைக்குத் தடை ஏற்பட்டு விட்டது. வந்த டாக்டர் இந்திராவைப் பார்த்துத் திடுக்கிட்டு நின்றுவிட்டார்.

"'யார்? இந்திராவா!' என்று டாக்டர் கந்தசாமி கேட்டார்.

"இந்திராவும் அவரைக் கண்டவுடன், 'கந்தசாமியா!' என்றாள்.

"அவர் என்னை அப்பால் போகச் சொல்லி விட்டு இந்திராவுடன் பேசிக் கொண்டிருந்தார். டாக்டர் என்னை மறுபடியும் கூப்பிட்டு 'இவளை நீங்கள் மணக்க நிச்சயித்திருக்கிறீர்களா? அல்லது உங்கள் தகப்பனார் உங்களுக்கு நிச்சயித்திருக்கிற பெண்ணை மணக்கப் போகிறீர்களா? இவள் என் தகப்பனாரால் என் தங்கையாக வளர்க்கப் பட்டாள். ஆனால் என் தங்கை யல்ல. சொந்தமுமில்லை. என் தகப்பனார் சாகும் தறுவாயில் எனக்குச் சொன்னது,—காட்டில் இவள் திருடர்களால் நகைகளைக் கழற்றி விடப்பட்டிருப்பதைக் கண்டு, எடுத்து வந்து காலராவால் மரணமடைந்த தன் உறவினரின் குழந்தை என்று ஜனங்களுக்குச் சொல்லி வளர்த்தார். இவள் ஒருவேளை உங்கள் மாமனாரின் பெண்ணாகவே இருக்கலா மென்று போட்டோவிலிருந்து சந்தேகப் படுகிறேன். பத்திரிகையில் ஒரு விளம்பரம் போட்டுப் பார்க்கலாம்' என்றார்.

"பத்திரிகையில் பின்வருமாறு ஒரு விளம்பரம் டாக்டர் கந்தசாமியால் போடப் பட்டது:

குற்றாலத்திற் கருகேயுள்ள காட்டில்—தேதியில் இரண்டு வயதும் பெண் திருடர்களால் விடப்பட்டுக் கிடந்தது. அப்பொழுது போட்டிருந்த ஆடை என் வசம் இருக்கிறது. அந்தக் காலத்தில் பெண்ணை இழந்திருந்தவர்கள் என்னைக் கேட்டுப் பெண்ணை வந்து பார்க்கலாம்.

"இது பிரகாரமான அடுத்த வாரம் கோபாலசாமி அய்யங்கார் கல்கத்தாவிலிருந்து ஓடி வந்தார். டாக்டர், குழந்தையின் ஆடைகளைப் பற்றி அவரை விசாரித்து, பிறகு தன்னிடமிருந்த சில துணிகளைக் காண்பித்தார். கோபாலசாமி அய்யங்கார் கும்பகோணம் உற்சவத்தில் காணாமற்போன தன் பெண்ணுக்கு உடுத்தின ஆடைகள்தான் அவை என்று சொன்னார். குழந்தைக்கு வலது கன்னத்திலிருந்த மச்சம் இந்திராவுக்கும் இருந்தது. அந்த ஆடையின் பின்னாலிருந்த கம்பெனியின் விலைச் சீட்டும் அப்படியே இருந்தது. பிறகு எங்கள் கல்யாணம் நடந்தது. இப்போது லலிதாவுக்கு ஒரு நல்ல வரன் தேடிக் கொண்டிருக்கிறோம்."

இவ்வாறு சௌரிராஜன் சொன்ன தன் கதையைக் கேட்டு நான் ஆசிரியரிடம் சென்று, "பெயரை மாற்றி உங்கள் பத்திரிகையில் இதைச் சிறு கதையாகப் போடச் சம்மதமா?" என்று கேட்டேன். பத்திராசிரியர் "பெயரை ஏன் மாற்ற வேண்டும்? அப்படியே போடலாம்" என்றார். எனக்கும் பெயர் கற்பனை செய்யும் தொந்தரவு இல்லாமற் போயிற்று.

## திவானின் சாமர்த்தியம்!

யுத்தம் ஆரம்பமான சமயத்திலே, இந்தியாவில் ஒரு குறிப்பிட்ட சமஸ்தானத்திலே ஐந்தாம் படை நடவடிக்கைகள் அதிகமாக இருப்பதாகத் தகவல் கிடைத்ததும், இந்திய சர்க்காருக்குக் கவலை உண்டாயிற்று. உடனே அந்தச் சமஸ்தான ரெஸிடெண்டுக்குக் கடிதம் எழுதி, "உங்கள் சமஸ்தானத்தில் ஐந்தாம் படை நடவடிக்கைகள் நடப்பது உண்மையா?" என்று கேட்டார்கள். ரெஸிடெண்டு அந்தக் கடிதத்தைச் சமஸ்தான திவானுக்கு அனுப்பி வைத்தார். திவான் அதைத் தமது காரியதரிசியிடம் கொடுத்தார். காரியதரிசி பல நாட்கள் மூலை முடுக்குகளிலும் சந்து பொந்துகளிலும் ஆராய்ந்து பார்த்த பிறகு, அந்த மாதிரியான நடவடிக்கைகள் எதுவும் இல்லையென்று திவானுக்குத் தெரிவித்தார். திவான் அந்தக் கடிதத்தை வைத்துக்கொண்டு நான்கு நாட்கள் யோசனை செய்தார்.

கடைசியில் பின்வருமாறு பதில் எழுதினார்:—"தற்போது எங்கள் சமஸ்தானத்தில் ஐந்தாம் படை நடவடிக்கை எதுவும் இல்லையென்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன். ஆனால், விரைவில் அம்மாதிரியான நடவடிக்கைகளை ஆரம்பிப்பதற்கான ஏற்பாடுகளை மேன்மை தங்கிய எங்கள் மகாராஜா செய்வாரென்று உறுதி கூறுகிறேன்."

# ஓர் அறநூல்

சத்தியம் பழசாகி விட்டதென்று யாராவது சொல்வார்களா?

தர்மம் பழசாகி விட்டதென்று யாராவது சொல்வார்களா?

சத்தியமும் தர்மமும் அமரத்வம் வாய்ந்தவை—நித்திய யௌவன மானவை.

சத்தியமும் தர்மமும் அமரத்வம் வாய்ந்தவை என்றால், அவற்றைப் பற்றிக் கூறும் நூல்களும் அமரத்வம் வாய்ந்தவையாகத் தானே இருக்க வேண்டும்? எவ்வளவு காலத்திற்கு முன்பு வெளியாகி, எத்தனை பதிப்புகள் வெளிவந்தாலும் அவை நித்திய யௌவன மாகத்தான் இருக்கும்.

ராஜாஜி பல வருஷங்களுக்கு முன் எழுதிய உபநிஷதப் பலகணியும், கண்ணன் காட்டிய வழியும், ஆத்ம சிந்தனையும் இப்போது புதுமைப் பதிப்பகப் பிரசுரமாக அறநூல்கள் என்ற பெயரிலே வெளி வந்திருப்பதைப் பார்க்கும் போது நமக்கு அவ்வாறே சொல்லத் தோன்றுகிறது.

இது சத்தியத்தைப் போல என்றும் சாஸ்வதமாக இருக்கத்தக்க நூல். எத்தனை பதிப்புகளும் வெளிவருவதற்கு ஏற்ற நூல்.

• • •

வேதாந்தம் என்றாலே நம்மவர்கள் பேயோ பிசாசோ என்று பயந்து ஓடுகிறார்கள். இந்த உலக வாழ்க்கைக்கும் அதற்கும் சம்பந்தமே இல்லையென்று கருதுகிறார்கள். இது எவ்வளவு தவறு என்பதை ராஜாஜி இந்தப் புத்தகத்தின் முன்னுரையிலே வெகு தெளிவாகவும் அழகாகவும் விளக்கியுள்ளார்.

வேதாந்தம் இந்த உலகத்துக்கே உரியது என்பதையும் இந்த உலகத்து வாழ்க்கையைத் திறம்பட நடத்துவதற்கே அது ஏற்பட்டதென்றும் அழுத்தமாகச் சொல்கிறார்.

இதற்கு உதாரணமாக இந்தப் புத்தகத்திலுள்ள ஒரு விஷயத்தை எடுத்துக் கொள்வோம்:

வேத காலத்திலே இந்தப் புண்ணிய பாரத நாட்டிலே பஞ்சம் வந்ததாக நமக்குத் தெரியவில்லை. அப்படி வந்திருந்தாலும், தற்போது இந்திய சர்க்கார் உணவு மெம்பரா யிருக்கும் ஸர் ஜ்வாலா பிரஸாத் ஸ்ரீவத்ஸவாவைப் போன்றவர்கள் அப்போது அரசாங்கத்தை நடத்தி வந்ததாகவும் தெரியவில்லை.

பாலும் தேனும் பொங்கி வழிந்த அந்தக் காலத்திலே கூட, நம் பண்டைப் பெரியோர்கள் பஞ்சம் போன்ற ஒரு விபத்து ஏற்பட்டாலும் ஏற்படலாம் என்று கருதி அதற்காக சில எச்சரிக்கைகளையும் உபதேசங்களையும் செய்து வைத்திருக்கிறார்கள்.

தைத்திரிய உபநிஷத்தில் பிருகுவிடம் அவருடைய தந்தை பின்வருமாறு கூறுகிறார்:

அன்னம் ந நிந்த்யாத் தத்வ்ரதம் ॥
அன்னம் ந பரிசக்ஷீத தத்வ்ரதம் ॥
அன்னம் பஹு குர்வீத தத்வ்ரதம் ॥

அதாவது, உண்ணும் உணவில் குற்றங் காணவேண்டாம். உணவை வீணாக்காதே. ஏராளமான உணவுப்பொருளை உண்டாக்கு.

இன்று இந்தியாவிலே பஞ்சம் வந்த பிறகு ஆயிரக்கணக்கான பொருளை விரயம் செய்து இந்திய சர்க்கார் விளம்பர இலாகா உணவுப் பொருள் உற்பத்தியைப் பெருக்கும்படியாகச் சொல்லும் உபதேசத்தை, பல்லாயிர வருஷங்களுக்கு முன்னால் பிருகு முனிவரின் தந்தையே சொல்லி யிருக்கிறார். "உணவுப் பொருளை அதிகமாக உண்டாக்கு. அமெரிக்காவை எதிர்பார்க்காதே!" என்று தெளிவாகவும் பச்சையாகவும் சொல்லி யிருக்கிறார்!

• • •

பகவத் கீதைக்கோ உபநிஷத்துகளுக்கோ நாம் மதிப்புரை கொடுப்பதோ அல்லது நன்றா யிருக்கிறது என்று அபிப்பிராயம் கூறுவதோ எவ்வளவு அசட்டுத்தனமான காரியம்! ஆனால், இப் புத்தகம் சம்பந்தப் பட்ட வரையில் ஒன்றை மாத்திரம் குறிப்பிட வேண்டியது மிக மிக அவசியமாகும். அது ராஜாஜியின் தமிழ் நடையாகும்.

உபநிஷதக் கருத்துக்களை ராஜாஜி ஓர் அழகிய கதைக் கொத்துப்போல ரஸமாக எழுதி யிருக்கிறார்.

கீதையில் தோன்றும் முக்கிய சந்தேகங்கள் எல்லாம் கண்ணன் காட்டிய வழியில் ராஜாஜி தெளிவாகவும் விளக்கமாகவும் எழுதி யிருக்கும் குறிப்புரை மூலம் மறைகின்றன.

அரேலியஸின் ஆத்ம சிந்தனையைப் படிக்கும் போது, அரேலியஸே தமிழில் எழுதியது போல அவ்வளவு தெளிவாக இருக்கிறது.

முடிவாக, இப் புத்தகத்தைப் படிக்கும் நம் மனதிலே ஓரே ஒரு அபிப்பிராயம் மாத்திரம் ஸ்திரமாக நிற்கிறது. அதாவது, கண்ணனும் வேதவியாஸரும் அரேலியஸும் எவ்வளவு அதிர்ஷ்டக்காரர்கள் என்பதும், தமிழ் பாஷைக்கு எவ்வளவு சிறந்த ஒரு ஞான பொக்கிஷம் கிடைத்திருக்கிறது என்பதுமாகும்.

அறநூல்கள்—எழுதியவர்: சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார்; பிரசுரம்: புதுமைப் பதிப்பகம், காரைக்குடி; விற்பனை உரிமை: அன்னை நிலையம், ராயவரம், புதுக்கோட்டை ஸ்டேட்; விலை: ரூ. 5.



வைதிக சாஸ்திரியும் வெய்யில் காலமும்!




ராஜி

ஒரு முயலும் மூன்று பூனைகளும் மிகவும் சிநேகமாக இருந்தன. பூனைகள் நாட்டில் வசித்து வந்தன. முயலோ பக்கத்திலுள்ள காட்டில் வசித்து வந்தது. பூனைகளை விட முயல் பூனைகளிடம் அதிக சிநேகமாக இருந்தது. முயல் எங்கேயாவது சினிமாவுக்கோ, டிராமாவுக்கோ அல்லது சங்கீதக் கச்சேரிக்கோ போக நேரிட்டால் தன் செலவிலேயே பூனைகளை அழைத்துப் போகும். ஆனால் பூனைகளோ முயலுடன் சிநேகமாக இருப்பது போல் நடித்தாலும் முயலுக்கு ஒரு உபகாரமும் செய்ததில்லை. எப்பொழுதும் முயலை ஏமாற்றுவதிலேயே கண்ணாக இருந்தன. முயல் நல்ல முயலானதால் அதைப் பொருட்படுத்தவில்லை.

ஒரு நாள் முயலும், பூனைகளும் வேடிக்கையாகப் பேசிக்கொண்டிருக்கும் பொழுது முயல் "சிநேகிதர்களே! நாம் ஏன் நிலாச் சாப்பாடு சாப்பிடக் கூடாது?" என்று கேட்டது. அதற்கு ஒரு பூனை "முயல் சொல்லுவது சரியான யோசனை. இன்று அமாவாசை. அடுத்த பௌர்ணமி அன்று நிலாச் சாப்பாடு சாப்பிடலாம்" என்றது. முயல் சொன்னதை மற்றவைகளும் ஆமோதித்தன.

அன்று முதல் நிலாச் சாப்பாட்டுக்கு வேண்டிய தின்பண்டங்களைச் சேகரிக்க ஆரம்பித்தன. முயலும் தனக்குக் கிடைத்த ரொட்டி, பிஸ்கத்து, பாலேட்டுக்கட்டி முதலியவைகளைப் பூனைகளின் வீட்டில் கொண்டு சேர்த்தது. நிலாச் சாப்பாட்டுக்குப் பூனைகளின் வீட்டில் பலவிதமான தின்பண்டங்கள் சேர்ந்தன. பௌர்ணமி தினமும் வந்தது. முயல் அன்று காலை காடெல்லாம் அலைந்து பல மாடுகளின் உதவியால் நிலாச் சாப்பாட்டுக்கு நிறையப் பால்கொண்டு வந்தது. பூனைகளும் முயலின் உதவியை மெச்சின. மூன்று பூனைகளும் முயலை அன்று இரவு எட்டு மணிக்கு நிலாச் சாப்பாட்டுக்கு அழைத்தன.

ஏராளமான தின்பண்டங்கள் சேர்ந்திருக்கவே பூனைகளுக்கு ஒரு யோசனை தோன்றிற்று. இந்தத் தின்பண்டங்களை நாம் மூவரும் தின்றால் என்ன? எதற்காக நிலாச் சாப்பாட்டில் முயலைச் சேர்க்க வேண்டும் என்று நினைத்தன. அப்பொழுது "நாம் முயலிடம் இரவு எட்டு மணிக்கு நம்முடைய வீட்டில் நிலாச் சாப்பாடு என்றல்லவா சொல்லியிருக்கிறோம்? முயல் இங்கு வருவதற்குள் ஏழு மணிக்கே வீட்டைப் பூட்டிக்கொண்டு தின்பண்டங்களை எடுத்துக் கொண்டு சமீபத்திலுள்ள வயல் பக்கம் போய்ச் சாப்பிடுவோம். முயல் வந்து தேடிவிட்டுப் போகட்டும்" என்றது ஒரு பூனை. மற்ற பூனைகளும் இதை ஆமோதித்து அதன்படியே செய்தன.

அப்பொழுது நல்ல நிலா வெளிச்சம். மூன்று பூனைகளும் "ஒருக்கால் முயல் நம் வீடு பூட்டியிருப்பதைக் கண்டு நம்மைத் தேடி வந்தால் என்ன செய்வது? ஆதலால் சீக்கிரமே ஆகாரங்களைச் சாப்பிட்டு விடுவது நலம்" என்று நிச்சயித்தன. உடனே ஒரு பூனை அவைகள் உட்காருவதற்காக ஒரு பெரிய வெள்ளைத் துணியைக் கீழே போட்டது. பிறகு அந்தத் துணியில் மூன்று பூனைகளும் உட்கார்ந்தன. பால், பிஸ்கத், ரொட்டி முதலிய தின்பண்டங்களை அவைகளின் எதிரில் வைத்துக் கொண்டன. "அப்பாடி! முயலை ஏமாற்றி விட்டோம்" என்று சொல்லிக் கொண்டே தின்பண்டங்

களைச் சாப்பிட ஆரம்பிக்கும் சமயத்தில் பூனைகள் உட்கார்ந்திருக்கும் இடத்தில் ஏதோ சப்தம் கேட்டது. பிறகு அவைகள் உட்கார்ந்த துணி மத்தியில் சற்று உயர ஆரம்பித்தது. கொஞ்சம் கொஞ்சமாகத் திடீரென்று துணி உயர ஆரம்பிக்கவே மூன்று பூனைகளும் பயந்தன. அவைகளுக்கு உடல் நடுக்கம் எடுத்தது. துணியின் நடு மத்தியில் ஒரு அடி உயர்ந்தவுடன் மூன்று பூனைகளும் பயந்து எல்லாத் தின்பண்டங்களையும் போட்டு விட்டு ஓட்டம் பிடித்தன.

ஒரு மணி நேரம் ஆயிற்று. மூன்று பூனைகளும் சற்று பயம் தெளிந்து அவைகள் சிரமப்பட்டுச் சேர்த்த தின்பண்டங்கள் என்ன ஆயிற்று என்று தெரிந்துகொள்ள மெதுவாக வயல் பக்கம் சென்றன. அப்பொழுது அங்கு அவைகள் வைத்திருந்த தின்பண்டங்கள் ஒன்றையும் காணவில்லை. எங்கு போயிற்று என்ற யோசனையுடன் பார்க்க, அவைகள் உட்கார்ந்திருந்த இடத்தில் ஒரு பள்ளம் தென்பட்டது. அந்தப் பள்ளத்தில் மூன்று பூனைகளும் எட்டிப் பார்க்க அவைகளுக்குத் தூக்கிவாரிப் போட்டது. ஏன் என்றால் அந்தப் பள்ளத்தில் அவைகளின் சிநேகித முயல் தன் மனைவி குழந்தைகளுடன் பூனைகள் விட்டுவிட்டுப் போன தின்பண்டங்களைத் தின்று கொண்டிருந்தது.

பூனைகள் எட்டிப் பார்த்ததைப் பார்த்த முயல் "சிநேகிதர்களே, வாருங்கள்! நான் இந்தப் பள்ளத்தில்தான் வசித்து வருகிறேன். சற்று முன்பு இப்பள்ளத்தின் மீது ஒரு துணி விரிக்கப்பட்டது. யார் விரித்தது என்று பார்ப்பதற்காக மெதுவாகத் துணியைத் தூக்கிக் கொண்டு வெளியே வந்தேன். அப்பொழுது இங்கு ஒருவரையும் காணவில்லை. ஆனால் நாம் சேகரித்து வைத்திருந்த தின்பண்டங்கள் யாவும் இங்கு வைக்கப்பட்டிருந்தன. உங்களையும் இங்கு காணவில்லை. ஆதலால் அத் தின்பண்டங்களை நானும் என் குடும்பத்தாரும் சாப்பிட்டு விட்டோம். சற்று முன்பு நீங்கள் வந்திருந்தால் நீங்களும் சாப்பிட்டிருக்கலாம்" என்று சொல்ல மூன்று பூனைகளும் அவமானத்தினால் தலை குனிந்தபடி திரும்பிச் சென்றன.

# கடிதமும் கல்யாணமும்

**எஸ். வி. எஸ்.**

அன்றைக்கு அதைப் படித்தபோது எனக்குத் தலை சுழன்றது; கண்ணெல்லாம் இருண்டது.

கொஞ்ச நாழிகை கழித்து மனதில் ஒரு வித ஆறுதல் ஏற்பட்டது. "நல்ல வேளை! ஏற்பட விருந்த ஆபத்திலிருந்து இவ்வளவு சீக்கிரம் தப்பினோமே" என்று எண்ணி மன நிம்மதி அடைந்தேன்!

* * *

செல்லாயிக்கு வயது பதினெட்டு அல்லது இருபது இருக்கும். அழகாகக் கூட இருப்பாள். அவள் அடிக்கொரு தடவை வீட்டுக்கு வருவாள்; என் தங்கை செல்லியிடம் ஏதாகிலும் பேசிவிட்டுப் போவாள். அவள் வருவது போவது எல்லாமே எனக்கு ரொம்பவும் பிடித்திருந்தது என்று சொன்னால் போதாதா, என்ன? 'காதல் — என்று சொல்ல வேண்டுமா?

செல்லாயி ரொம்பவும் ஏழைக் குடும்பத்தைச் சேர்ந்தவள். ஆனால் நாங்களோ ஊருக்குள்ளே பெரிய பணக்காரர். எங்கள் ஐயாவுக்கும் நான் ஒரே பிள்ளை. எங்கள் இனத்தாரிலேயே பி. ஏ. வரை படித்த அதி அபூர்வமான பிள்ளை நான் ஒருவன்தான்.

இந்த லக்ஷணத்தில் எனக்கும் செல்லாயிக்கும் கலியாணம் என்று பேச்சு எடுக்க முடியுமா?

இதனிடையில் என் தங்கை செல்லி வேறு இருக்கிறாள். அவள் கலியாணம் முடிந்த பிறகுதான் என்னைப்பற்றிப் பேச்சு எடுக்க முடியும்.

எங்கள் அப்பா செல்லியைத் தம் மைத்துனர் மகன் சடையப்பத் தேவனுக்குக் கொடுக்க வேண்டும் என்று முயற்சித்தார். சடையப்பன் கொஞ்சம் படித்தவன். பதினைந்து ரூபாய் பரீக்ஷை கூட எழுதியிருந்தான். அந்தப் படிப்புப் படித்த விபரீதந்தான் என்று நினைக்கிறேன், "இந்தப் பணக்கார வீட்டுச் சம்பந்தமே வேண்டாம்" என்று சொல்லி விட்டான்! அவன் தாயார் கொஞ்சம் நிர்ப்பந்தப் படுத்தவே ஓடிவிட்டான்; இருக்கிற இடமே தெரியவில்லை.

இதையெல்லாம் பற்றி யோசித்துக் கொண்டிருந்தபோது, "அண்ணே, இந்தக் காகிதத்தைப் படித்துச் சொல்லுங்கள்" என்று ஒரு குரல் வந்தது. எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. "அண்ணே!" என்று செல்லாயி அல்லவா கூப்பிட்டாள்!

கடிதத்தைப் பிரித்தவுடன் "என் அருமைக் கண்மணி செல்லாயி" என்று ஆரம்பித்திருந்தது.

முடிவில் "உன் அன்பார்ந்த கணவன்: சொக்கன்" என்று எழுதியிருந்தது.

இதைப் பார்த்ததும் ஆரம்பத்தில் சொன்னபடி எனக்குக் கண் இருண்டு, தலை சுழன்றதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை அல்லவா? கலியாணமான பெண்ணையா காதலித்தோம்? நல்ல வேளை, தப்பினோம். விஷயம் இவ்வளவு சீக்கிரம் தெரிந்ததே என்று மன ஆறுதல் ஏற்பட்டது.

செல்லாயி என்னுடன் பேச வந்ததும் அதுதான் முதல் தடவை; அதுவே கடைசித் தடவை! ஆகவே கடிதம் படித்த வேளையும் நல்ல வேளைதானே!

அன்றிலிருந்து அவள் உறவு என் தங்கையிடம் ரொம்பவும் அதிகரித்துவிட்டது.

## 2

வெகு நாட்களுக்குப் பிறகு ஒருநாள் என் தங்கை செல்லி என்னிடம் வந்து "அண்ணே, நம்ம செல்லாயி என்ன இருந்தாலும் யோகக்காரிதான்" என்றாள்.

செல்லாயி அவ்வளவு அழகாக இருந்தும் அவள் கண்களில் சோகக் குறி யிருந்தது. ஏனோ அதுவே அவளிடம் ரொம்பவும் வசீகரித்தது. அதனால் செல்லி சொன்னதற்கு "அப்படி என்ன யோகம் அவளுக்கு?" என்றேன்.

"ஒரு பெண்ணுக்கு அன்பார்ந்த கணவனைத் தவிர்த்து வேறு என்ன வேணும்?" என்றாள்.

"அவளுடைய கணவன்தான் இங்கு இல்லையே" என்றேன்.

"அவன் இங்கு இல்லாவிட்டால் என்ன, அவன் அன்பு இருக்கிறதே!" என்றாள்.

"அவளுடைய அன்பை நீ எப்படிக் கண்டாய்?" என்று கேட்டேன்

"அவன் தன் கணவன் எழுதும் கடிதங்களை எல்லாம் என்னிடம் கொடுத்துத்தான் படிக்கச் சொல்லுகிறான். ஒவ்வொரு கடிதத்திலும் ஒரு வரி இரண்டு வரி எவ்வளவு அழகாக இருக்கிறது. அவன் உள்ளத்தையே திறந்து காட்டிவிடுகிறான். ஒரு தரம் 'நான் உன்னை விட்டு இரண்டாயிரம் மைலுக் கப்பால் இருக்கிறேன். உண்மையில் முன்பு உன்னுடன் இருந்ததைவிட இரண்டாயிரம் மடங்கு நெருங்கி யிருக்கிறேன், செல்லாயி!' என்று எழுதியிருக்கிறான்.

"இன்னொரு தடவை, 'இந்தக் கடிதத்தை ஏதோ மையினால் எழுதினேன் என்று எண்ணிக் கொள்ளாதே. உன்னை நினைந்து நினைந்து உருகும் கண்ணீரினால் எழுதினேன் என்று எண்ணிக் கொள்' என்று எழுதியிருக்கிறான்.

"இப்படி எத்தனை கடிதங்கள்!

"இவ்வளவு அன்பார்ந்த கணவனைச் செல்லாயி பெற்றதற்கு அவளை யோகக்காரி என்று சொல்லாமல் என்ன சொல்வது, அண்ணா!" என்றான் செல்லி.

"அப்படியா? அந்த மனுஷனைப் பார்த்தால் தேவலைபோலிருக்கிறதே!" என்றேன்.

"எனக்குக் கூட அவரைப் பார்க்க வேண்டும் போலிருக்கிறது, அண்ணா!" என்றான்.

"பின், நீயே ஏற்பாடு செய்யலாமே. நீதானே அவனுக்குக் கடிதம் எழுதுகிறாய். கணவனை வரச்சொல்லி அவளை எழுதச் செய்கிறதுதானே?" என்றேன்.

அதற்குச் செல்லி சொன்ன பதில் என் மனசுக்கு ரொம்பவும் வேதனையாக இருந்தது.

"செல்லாயி அவரை வரச்சொல்லி எழுதவே துணிய மாட்டேன் என்கிறாள். இங்கிருந்த வரையில் அடியும் குத்தும் தவிர்த்து ஒரு ஆசை மொழி கூடச் சொல்லாத புருஷனுக்குப் பட்டாளத்தில் சேர்ந்தவுடன் இவ்வளவு ஆசையும் அன்பும் எங்கிருந்து வந்தது என்று சந்தேகப்படுகிறாள், அண்ணா! பட்டாளத்தில் சேர்ந்தால் இவ்வளவு மனமாறுதலா ஏற்படும்? மறுபடியும் அவர் இங்கு வந்தால் ஒருகால் பழையபடி ஆரம்பித்து விடுவாரோ என்றெல்லாம் பயப்படுகிறாள்" என்று சொல்லி நிறுத்தினான்.

எனக்கு என்ன செய்வது என்று தெரியவில்லை. இருந்தாலும் நான் எவ்வளவோ உற்சாகப் படுத்தி, அப்படி யெல்லாம் மாற மாட்டார் என்று சொல்லி அனுப்பி வைத்தேன். மனசுக்குள், செல்லாயி போன்றவருக்குக் கணவன் ராக்ஷஸனா வாய்க்க வேண்டும் என்று வருத்தப்பட்டேன்.

## 3

எங்கள் குடியிருப்பில் திடீர் என்று ஒரு நாள் கலகலப்பு ஏற்பட்டது. விஷயம் விசாரித்ததில் பட்டாளத்திலிருந்து இரண்டு பேர் திரும்பி வந்திருக்கிறார்கள். அவர்களில் ஒருவன் செல்லாயியினுடைய கணவன்—சொக்கன்; மற்றொருவன் சொக்கனுடைய சிநேகிதன்.

அவர்கள் இருவரும் எங்கள் வீட்டு வழியாகத்தான் போகவேண்டும். செல்லி அவர்களை ஜன்னலிலிருந்து பார்த்தான். ஒருவன் உயரமாகவும் பொது நிறமாகவும் இருந்தான். இன்னொருவன் கொஞ்சம் குட்டை; நிறங்கூடக் கறுப்புத்தான். ஆனால் முகம் ரொம்பவும் களையாக இருந்தது.

இனி, அவர்களைப் பற்றிய சமாசாரம் செல்லாயி கொண்டு வருவாள் என்று காத்துக் காத்துச் செல்லி சடைத்துப்போனான்.

---

## கிளம்பிய காலம்



பெண்ணைப் பெற்றவர்:— உங்களுக்குத் தெரிஞ்ச இடத்திலே ஏதாவது வரன் இருந்தால் சொல்லுங்களேன்.

நண்பர்:—அந்தக் காலத்தில்தான் இப்படி வரனைத் தேடிண்டு ஊர் ஊராக அலைவார்கள்...... இந்தக் காலத்தில் கூடவா இப்படி?...

பெண்ணைப் பெற்றவர்:—நான் அந்தக் காலத்தில் ஜெம்பினவன்தான், ஸார்!

சூரியன் அஸ்தமிப்பதற்கு அரை நாழிகைக்கு முன்னால் செல்லாயி வீட்டுக்கு வந்தான்! வந்தவன் வெகு சீக்கிரமாகவே திரும்பிப் போய் விட்டான்.

அவன் போனானோ இல்லையோ, "அண்ணா, அவர்களுக்கு ஒரு விருந்து நம்ம வீட்டில் வைக்கலாமா?" என்றாள் செல்வி.

"எவர்களுக்கு?" என்று கேட்டேன்.

"செல்லாயி வீட்டுக்காரருக்கும் அவருடைய சினேகிதருக்கும்" என்றாள்.

"முன்னும் பின்னும் தெரியாதவர்களுக்கு எப்படி விருந்து வைப்பது?" என்றேன்.

"அவர்களைத் தெரிந்து கொள்வதற்குத் தானே அண்ணா விருந்து வைக்கச் சொல்கிறேன்?" என்றாள்.

4

"கலியாணம் என்பது பற்றி நான் சற்றும் சிந்திக்காத போது என் அப்பாவும் அம்மாவும் பேச்செடுத்தார்கள். உண்மையாகச் சொல்கிறேன், கலியாணம் என்பதற்குத் தூக்குத்தண்டனை என்றுதான் அர்த்தம் செய்து கொண்டேன். மேலும் எனக்குப் பார்த்த இடம், எங்கள் அந்தஸ்தைவிட உயர்ந்த பணக்கார இடம். நான் வேண்டாம் என்று எவ்வளவோ சொல்லிப் பார்த்தேன். அவர்கள் கேட்கவில்லை. நிர்ப்பந்தப்படுத்தினார்கள். நான் சொல்லாமல் கொள்ளாமல் பட்டாளத்தில் சேர்ந்து விட்டேன். அங்கே நம்ம பக்கத்துக்காரர் என்று இவர் (செல்லாயினுடைய கணவர்) தான் எனக்குச் சினேகிதம் ஆனார். கல்யாணமாகி ஏதோ மனம் வெறுத்துப் பட்டாளத்தில் சேர்ந்தாராம். குடும்பம் என்றால் நாலும் இருக்கத்தான் செய்யும். ஆனால் தன் மனைவியே அழைத்தாலொழிய ஊருக்குத் திரும்புவதில்லை என்று முடிவு செய்திருந்தார். எனக்கு வருத்தமாக இருந்தது. இவருக்காக வேண்டி நான்தான் அவர் மனைவிக்குக் கடிதம் எழுதுவேன். இவர் அனுமதி பெற்று ஒரு வாக்கியம் இரண்டு வாக்கியம் அதிகப் பிரசங்கித்தனமாக எழுதி வைப்பேன். அதன் பலன் இரண்டு வருஷம் கழித்து இப்போது ஏற்பட்டது. இவர் மனைவி வரச் சொல்லி எழுதினாள். நாங்கள் புறப்பட்டு வந்திருக்கிறோம்" என்றார் செல்லாயி கணவரின் தோழர்.

ஆமாம், எங்கள் வீட்டில் நடந்த விருந்தின்போதுதான் இவ்வளவும் அவர் சொல்லிக் கொண்டிருந்தார்.

இடையில் நான் குறுக்கிட்டு "அப்படியானால் நீங்கள் இங்கு வந்ததற்குக் காரணம் என் தங்கை செல்வி தான்" என்றேன்.

"தங்கள் தங்கை செல்வியா? ஒன்றும் புரியவில்லையே" என்றார்.

"செல்லாயிக்கு வரும் கடிதங்களை யெல்லாம் என் தங்கைதான் அவளுக்குப் படித்துச் சொல்லுவாள். அதில் நீங்கள் எழுதும் அந்த ஒவ்வொரு வாக்கியத்தையும் படித்துவிட்டு, இதை எழுதியவரைப் பார்க்க வேண்டும் என்று சொல்லிக்கொண்டிருப்பாள். பிறகுதான் செல்லாயியைக் கொண்டு புறப்பட்டு வரச் சொல்லி எழுதினார்களாக்கும்" என்றேன்.

என் தங்கை அந்த வாக்கியங்களைப் படித்தாள் என்றவுடன் அவர் முகம் அப்படியே வியர்த்து விட்டது! நான் ஏதோ தவறு செய்துவிட்டேனோ என்று கூட பயந்து விட்டேன். உடனே பேச்சை மாற்றுவதைத் தவிர்த்து வேறு வழியில்லை.

"இப்பொழுது உங்களுக்கு எந்த ஊருக்குப் போகவேண்டும்" என்று கேட்டேன்.

"கடைய நல்லூர்."

"கடைய நல்லூரில் யார்?"

"விக்ரபாண்டித் தேவர் என்று கேள்விப் பட்டிருக்கலாமே?"

விக்ரபாண்டித் தேவர் எங்கள் மாமா அல்லவா என்று யோசித்தேன். "உங்கள் பெயர் சடையப்பனோ?" என்றேன்.

"அது எப்படி உங்களுக்குத் தெரிந்தது?" என்றார்.

"நீங்கள் என் மாமா மகன் அல்லவா!" என்றேன்.

* * *

எங்கள் விஷயங்களில் சற்றும் தலையிடாத எங்கள் அப்பாவிடம் "நம்ம செல்வியைக் கட்டிக்கொள்ள மாட்டேன் என்று சொன்ன மாப்பிள்ளை செல்வியைத் தேடிக் கிட்டு வந்திருக்காரு" என்றேன்.

அவருக்கு ஆச்சரியம் தாங்கவில்லை; அளவு கடந்த சந்தோஷம்!

இதை யெல்லாம் கேட்டுக் கொண்டு மௌனமாயிருந்த செல்லாயினுடைய கணவர், "செல்லாயியை எனக்குச் சம்பாதித்துக் கொடுத்ததற்கு உமக்குச் சரியான பரிசு!" என்றார் தன் தோழரிடம்.





"லக்ஸ்
டாய்லட் சோப்பை
உபயோகிப்பதுதான் என்
எளிதான அழகுபடுத்திக்
கொள்ளும் முறை" என்று
கூறுகிறார்

# மாயா பானர்ஜி

















சினிமா நக்ஷத்திரங்கள்
விரும்பும்
அழகையளிக்கும் சோப்

LTS. 137-23-40 TM

LEVER BROTHERS (INDIA) LIMITED






சுவையாய் ஜீரணமாகிறது

சுத்தமானது

விடமின் அடங்கியது




# டால்டாவில் வறுத்த பூரிகள் வாயில் கரையுகின்றன—மேலும் ஊக்கத்தையும் அளிக்கின்றன!

டால்டா உங்கள் தின்பண்டங்களை ருசியுள்ளதாகச் செய்யும் வஸ்துமட்டுமன்று—அதுவே ஊக்கமளிக்கும் உணவு! எளிதில் ஜீரணமாகக் கூடியதும், விடமின் நிரம்பியதுமான இச் சமையல்செய்ய உதவும் சாதனத்தின் அறிந்த சத்தையளிக்கும் திறமையைக் கொண்டு உங்கள் தினந்தோறுமுள்ள சாப்பாட்டைச் சீர்படுத்திக் கொள்ளுங்கள். டால்டா ஒவ்வொரு ஸ்திரீக்கும் ஒரு நன்கொடை—அது அவர் தயாரிக்கும் சாதாரண தின்பண்டங்களுக்கு விசேஷச் சுவையை யளிப்பதோடு அவர் குடும்பத்திற்கு அதிகப்படியான ஊக்கத்தையும் கொடுக்கிறது.

★ஆங்கிலத்தில் மட்டும் எழுதப்பட்டுள்ள டால்டா சமையல் புத்தகத்தின் உதவியுடன் உங்கள் சாப்பாட்டுத் திட்டத்தை அமையுங்கள். சத்தைத் தரும் திறமைக்கென ஆராய்ந்தெடுத்த சுவையுள்ள 150-க்கு மேற்பட்ட இந்தியத் தின்பண்டங்களைப் பக்குவம் செய்யும் முறைகள் இதில் அடங்கியிருக்கின்றன. உங்கள் புத்தகத்திற்கு Dept. A461 P.O. Box No. 353, Bombay, என்ற விலாசத்திற்கு நான்கு அணா ஸ்டாம்பு அனுப்புங்கள்.

HVM. 48-23 TM

THE HINDUSTAN VANASPATI MANUFACTURING CO., LTD.

SUNSHINE

Glaxo

ஸன்ஷைன் கிளாக்ஸோ

குழந்தைகளை புஷ்டியாக வளர்க்கிறது

இந்தியாவில் டிஸ்ட்ரிப்யூட்டர்கள் :
எச். ஜே. பாஸ்டர் & கோ., லிட்.
பம்பாய் - கல்கத்தா - மதராஸ் - லாகூர்

குழந்தைகள் பராமரிப்பைப் பற்றிய சிறிய புத்தகம் 4 அணாவுக்கு ஸ்டாம்புகள் அனுப்பிப் பெற்றுக் கொள்ளலாம். உங்கள் பெயரையும் விலாசத்தையும் எச். ஜே. பாஸ்டர் & கோ. லிட்., த. பெ. 202, பம்பாய் என்ற விலாசத்திற்கு அனுப்புங்கள்.

இருமல், ஜலதோஷத்திற்கு
சாஸ்திரரீதிப்படி தயாரித்த
ஓர் உன்னதமான மருந்து!

ஸிரோலின்

'ரோச்'








Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladen's Garden, Poonamalle High Road, Kilpauk, Madras.




# லோத்ரா

கர்பாசய ரோக நிவாரணி

கர்பாசயக் கோளாறுகளால் அவஸ்தைப் பட்ட பின் லோத்ரா அவளுக்கு புத்துயிரும் ஆரோக்கியமும் அளித்தது.



கேசரி குடீரம் லிட்., மதராஸ்

ஹைதராபாத் சமஸ்தானம், ஆந்திர ஜில்லாக்கள், தமிழ் நாடு முதலிய இடங்களுக்கு ஏஜண்டுகள்:—

**தோராம ஜெனரல் ஸ்டோர்ஸ்**

**செகந்திராபாத் : பெஜவாடா : மதுரை**



# ஹாம்டார்ட்



ஹெர்பல்

## ஆயின்ட்மென்ட்

விரைவில் காயங்களை ஆற்றி சகல சரும வியாதிகளையும் சொஸ்தமாக்குகிறது



வெட்டுக் காயம், ரணம், தீப்புண், பரு, சொறி சிரங்கு, முதலிய சரும ரோகங்களுக்கு

ஹாம்டார்ட் தவாகானா லெபோரேடரீஸ் டில்லி.
(ஸாபி-Safi-யை தந்த ரத்தசுத்தி மருந்து தயாரிப்பாளர்கள்)
HD. 8.

எல்லா பிரபல கெமிஸ்டுகளிடமாவது அல்லது கீழ்க்கண்ட சப் ஏஜண்டுகளிடமாவது கிடைக்கும்.

சப் ஏஜண்டுகள்:

1. மெஸர்ஸ் ஈஸ்டர்ன் ஏஜன்ஸீஸ், ஷொரனூர்

சேலம், மதுரை, சென்னை, திருநெல்வேலி, செங்கல்பட்டுக்கு:

2. மெஸர்ஸ். கோல்டன் கம்பெனி, 38, குப்பீன் தெரு, பண்டிச்சேரி
3. மெஸர்ஸ். கமர்ஷியல் ஏஜன்ஸீ, 101, ஆண்டார் தெரு, தெப்பக்குளம் போஸ்டு, திருச்சிராப்பள்ளி

Regd. No. M. 4392

# சார்லீஸ் டீ




அழகிய
பாக்கெட்டுகளில்
காற்றுப் புகாத
உறைகளில்

# பிஸ்கட்ஸ்

**CHARLEY & CO. USILAMPATTI.**

Agents For Salem & N. Arcot Dts. The General Agencies Corporation First Agraharam, Salem. Agents For Nilgiris: Messrs. Brilliant Traders. Ootacamund